# கல்கி

சன் டீ.வி. உமா மகேஸ்வரி. 'பெப்ஸி உங்கள் சாய்ஸ்' நிகழ்ச்சியின் மிட்டாய்க் குரல். இங்கே உமா குறித்து சில தகவல்கள் :

● உமாவின் சாய்ஸ்...? கம்ப்யூட்டர்கள்! ("கம்ப்யூட்டர்னா உயிர்!") பிகாம். பட்டதாரி. ஸி.ஏ.வைப் பாதியில் நிறுத்தி விட்டு ...த்யபாமா இஞ்சினீரிங் கல்லூரியில் எம்.ஸி.ஏ. சேர்ந்திருக்கிறார்.

● சூரத் புடவை, ஸ்ரீராம் ...ருப் விளம்பரங்களில் நடித்திருக்கும் முன்னனுபவம் இன்று கைகொடுக்கிறது.

● சரஸ்வதி பூஜை சமயம் ...ணிலாவிலிருந்து நேரடியாக ஒளிபரப்பான நிகழ்ச்சிக்கு, கூப்...

## போனின் 'சாய்ஸ்' என்ன?

...ட்டும் போக இயலாதது குறித்து ரொம்ப வருத்தம் உமாவுக்கு. ("திடீர்னு சொன்னாங்க. பாஸ்போர்ட்டுக்கு நான் எங்கே போவேன்?")

● 'உங்கள் சாய்ஸ்' மிக பாப்...லரானதும் பல சினிமா பெரும்புள்ளிகள் நடிக்கக் கூப்பிட்டிருக்கிறார்கள். நடிப்பில் முற்றிலும் ஆசையில்லாததால் மறுத்துவிட்டார்.

● உமாவுக்குப் பெயின்டிங்...ில் வெகு ஆர்வம். (நாம் பார்த்தவரை, மேக்-அப் போட்டுக்கொள்வதிலும்.)

● ஒரு பண்ணை வைக்கும் அளவுக்கு நாய்கள் வளர்க்கிறார். லல்லி, பப்பி, குஷ்பு... பானுப்ரியான்னு கூட ஒண்ணு வெச்சிருந்தோம். இப்ப வித்துட்டாம்!)



பதிவு எண்: 26383 போன்: 583241




# கல்பதரு பெனிபிட் பண்டு லிமிடெட்

(கம்பெனிகள் சட்டப்படி பதிவு செய்து நிறுவப்பட்டது)
பதிவு அலுவலகம்: 134, ராசப்ப செட்டி தெரு,
(ஸ்ரீ கந்தகோட்டம் அருகில்) பார்க் டவுன், சென்னை-600 003.

**பிக்சட் டிபாசிட் திட்டம் மாத வட்டிக்கான காசோலைகள் முன் கூட்டியே வழங்கப்படும்**

| காலம் | 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|---|
| வருட வட்டி வீதம் | 14% | 15% | 16% | 17.5% | 18.5% | 19% | 19.5% | 20% * |



## மகளிர் ஆண்டு திட்டம்

**1994** சர்வதேச மகளிர் ஆண்டை முன்னிட்டு பெண்கள் பெயரில் செலுத்தப்படும் பிக்சட் டிபாசிட்டுகளுக்கு 1% அதிக வட்டி வழங்கப்படும்.
குறைந்த அளவு டிபாசிட் ரூ. 5000/- காலம்: 1 ஆண்டு



## பிறந்த நாள் பரிசு திட்டம்

ஆண்டுக்கு ரூ. 920/- வீதம் 4 ஆண்டுகள் செலுத்தி 5ஆம் ஆண்டு முதல்
ரூ. 1000/- ஆண்டுதோறும் தொடர்ந்து பெறுவீர்!!



## கல்பதரு மணிபேக் திட்டம்

அ) பிரதி மாதம் ரூ.100/- வீதம் தொடர்ந்து 15 வருடம் செலுத்த வேண்டும்
முதல் 5ம் ஆண்டு முடிவில் நீங்கள் செலுத்திய ரூ. 6000/-ஐ பெறுவீர் !
2வது 5ம் ஆண்டு முடிவில் மீண்டும் ரூ.6000/-ஐ பெறுவீர் !
3வது 5ம் ஆண்டு முடிவில் ரூ.51,000/-ஐ பெறுவீர் !



## முதியவர் நலத்திட்டம்: வயோதிகர் விதவைகள் கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

| தொகை | காலம் | வட்டிவீதம் |
|---|---|---|
| ரூ. 10,000 | 12 மாதங்கள் | 20% |
| ரூ. 10,000 கீழ் | | 19% |

## சேமிப்பு டிபாசிட் திட்டம் - 10% வரை வட்டி வழங்கப்படும்



**கடன்** — நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும்
சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும்

வட்டி விகிதம் ரூ.1.95

அலுவலக நேரம் : காலை 8.30 முதல் 12.30 வரை மாலை 2.00 முதல் 6.00 வரை ஞாயிறு காலை 8.30 முதல் 12.30 வரை

பயன் பெற ரூ. 5/- செலுத்தி பங்குதாரர் ஆவீர். (செவ்வாய் விடுமுறை) பாதுகாப்பு • சேவை • சுபிட்சம்



**சுதா ரகுநாதன் பற்றி ரகுநாதன்:**

● சுதாவுக்கு ஷண்முகப்ரியா, சுபபந்து வராளி இரண்டு ராகங்களும் ரொம்பப் பிடிக்கும். சுபபந்து வராளியைத்தான் எப்போதும் முணுமுணுப்பாள்.

● தன் குரு MLV படத்தின் முன் உட்கார்ந்து மனமுருகப் பாடுவாள் – நேரம் கிடைக்கும் போதெல்லாம்.

● கச்சேரிக்குக் கிளம்பும் முன் பெரியவர்களை வணங்கி விட்டுத்தான் செல்வாள்.

● விசேஷங்களுக்குச் செல்கையில், தான் பாடகியாக அமராமல், யாராவது பாடி, உட்கார்ந்து ரசித்து வர ரொம்பப் பிடிக்கும்.

● வத்தக் குழம்பு ரொம்பப் பிடிக்கும் அவளுக்கு.

"உங்கள் 'பெட்டர் ஹாஃபை'ப் பற்றிக் கொஞ்சம் பேசுங்கள்" என்று சில பிரபலங்களின் மனைவியரைக் கேட்டோம். (ஒரு கணவரையும்.)

# சொன்னாங்க...

**எஸ்.வி. சேகர் பற்றி திருமதி உமா:**

● குழந்தைகளோ, நானோ எங்காவது பிக்னிக் போக வேண்டுமென்று கேட்டால், கோவில் கோவிலாகத் தான் இழுத்துப் போவார்.

● ரொம்ப டென்ஷன் பேர்வழி. கையில் வைத்துக் கொண்டே, 'காணோம் காணோம்' என்று அலைவார்.

● தமாஷாகப் பேசுவார். பேசாமல் உட்கார்ந்திருந்தால் கோபம் என்று அர்த்தம்.

● ஜோசியத்தில் அபார நம்பிக்கை அவருக்கு.

● உணவுவகையில் பாகற்காய், கீரை, ரசம் ரொம்பப் பிடிக்கும்.

● குழந்தைகள் பாட விஷயத்தில் இட்டே வரமாட்டார். அதுதான் எனக்குப் பிடிக்காது.





**பாக்யராஜ் பற்றி பூர்ணிமா:**

● உள்ளூரில் இருக்கும் நாட்களில் குழந்தைகளுடன் அதிக நேரம் செலவழிக்க முடியாததால், லீவு நாட்களில், எல்லோரையும் அவுட்டோருக்கு அழைத்துப் போவார்.

● மனதில் பட்டதை அப்படி அப்படியே பேசி விடுவதால் அடிக்கடி அடுத்தவர் வருத்தத்திற்கு ஆளாகி விடுவார்.

● தொழில் டென்ஷனை வீட்டில் காட்ட மாட்டார். லாப நஷ்ட விஷயங்களைக் கூட

● உடை விஷயத்தில் ஆண்களாக இருந்தாலும் பெண்களாக இருந்தாலும் ரம்மியமாக உடுத்த வேண்டும் என்பார். தன் டிரெஸ் விஷயத்தில் அதிக சிரத்தை எடுத்துக் கொள்வார். சந்தனக் கலர் அவருக்கு ரொம்பப் பிடிக்கும்.



**தேவா பற்றி திருமதி விஜயா**

● நல்ல நேரம் பார்த்துத்தான் ட்யூன் போட ஆரம்பிப்பார். எப்போதும் ட்யூன் பற்றிய யோசனைதான்.

● இசைக் குழுவினருக்கு நான் தான் வீட்டிலிருந்து சாப்பாடு அனுப்ப வேண்டும் என்று விரும்புவார். இவரும் இணைந்து பேர்களுக்காவது அனுப்புவேன். சேர்ந்துதான் சாப்பிடுவார்.

● ப்யூர் வெஜிடேரியன். இட்லி, மிளகாய்ப் பொடி ரொம்பப் பிடிக்கும்.

● ஒயிட் அண்ட் ஒயிட் தான் எப்போதும் அணிவார். பேண்ட்டும் ஜிப்பாவும் அவரது தேசிய உடை.

● சமீபத்தில் பெண்கள் இருவருக்கும் மெடிக்கல் காலேஜ் சீட் கிடைக்காதது குறித்து ரொம்ப வருத்தம் அவருக்கு. பையனுக்கு இயல்பாகவே இசையார்வம் இருப்பதில் பெருமையும் மகிழ்ச்சியும்.

தொகுப்பு : மாலதி சந்திரசேகரன்

# யேசுதாஸ் ஏன் அழுதார்?

தொகுப்பு:
மௌலி,
ஸ்வீட்ரவி



● அண்மையில் சேகர் கபூர் சென்னை வந்திருந்தார். தமது பாண்டிட் குவின் திரைப் படத்தைப் (பூலன் தேவி வாழ்க்கைக் கதை) பிரத்தியேகமாய் ஒருவருக்குப் போட்டுக் காட்டினார். அவர் : இயக்குனர் மணிரத்னம்.





● வலம்புரி ஜான், நடிகள் நாயகத்தின் வாழ்க்கை வரலாற்றைத் தமிழில், கவிதை நடையில் எழுதிக் கொண்டிருக்கிறார். விரைவில் வெளியாகவிருக்கும் அவரது இன்னொரு புத்தகத்தின் தலைப்பு: நீங்கள் கேட்காதவை.

● 'கோட்டா' - இது ஒரு கன்னட நாவலின் பெயர். தெற்கு கர்நாடகா மைசூர் மாவட்டங்களில் சில வாரங்கள் தங்கி, அங்கு வாழும் கோரகர்கள், சாலிகர்கள் என்ற இரு பழங்குடியினரின் வாழ்க்கை முறையை அடிப்படையாய் வைத்து எழுதியிருக்கிறார் நாவலாசிரியர். யார் தெரியுமோ? கர்நாடகா முதல்வரான வீரப்ப மொய்லிதான்! கோட்டா, மொய்லியின் ஏழாவது நாவல்.



● 'மலையாளத் திரை இசையின் பொன் விழாவையொட்டி, திருவனந்தபுரத்தில் ஒரு நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அதில் மனித நேயம் பற்றிய பாடல் ஒன்றைப் பாடும் போது பாடகர் தம்மைக் கட்டுப் படுத்திக் கொள்ள முடியாமல் அழுதே விட்டார்! அந்தப் பாடகர் : கே. ஜே. யேசுதாஸ்.



● சந்தனக் கடத்தல் வீரப்பன் மற்றும் அவனுடைய கூட்டாளிகள் தலைக்கு, இதுவரை நமது அரசாங்கம் அறிவித்துள்ள மொத்த வெகுமதி ஒரு கோடியே அறுபது லட்சம். இதில் வீரப்பன் மற்றும் அவன் தம்பி அர்ச்சுனன் தலைகளுக்கு மட்டும் தலா 40 லட்சம். வீரப்பன் கூட்டத்தினர் மீது போடப்பட்டுள்ள வழக்குகளின் எண்ணிக்கை 121. இதில் கர்நாடக அரசு 54ம் மீதியை தமிழ்நாடும் போட்டுள்ளன.



● ஹிட்லரிடம் அவரது நண்பர்கள் சுவிஸ் நாட்டைக் கைப்பற்ற வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர். ''வேண்டாம்'' என்றார் ஹிட்லர். ''சுவிட்சர்லாந்து ஓர் அழகான நாடு. நாம் ஆசைப்பட்டு இப்போது அதை அழித்து விட்டால் பிறகு எதிரிகளிடம் ஒன்றாக அமர்ந்து பேச நடுநிலை நாடு என்பது இல்லாமல் போய் விடும். மேலும் உங்களைப் போன்ற உயர் ராணுவ அதிகாரிகள் ஓய்வு கொள்ள விரும்பினால் போரில்லாத நாடு என்று ஒன்று வேண்டுமல்லவா?''

(ஆதாரம் : வியப்பூட்டும் செய்திகள்)

● கலைஞர் கருணாநிதிக்கு அண்ணாமலை பல்கலைக் கழகம் "டாக்டர்" பட்டம் வழங்கியதை முன்னிட்டு சேலம் தமிழாசிரியர் மன்றம் அவருக்கு ஒரு பாராட்டு விழா நடத்தியது. அதில் கலந்து கொண்டு கலைஞர் பேசும் போது, கூறினார் :

"எனக்கு அண்ணாமலை பல்கலைக் கழகம் டாக்டர் பட்டம் வழங்கியுள்ளது. நாவலருக்கு மதுரை பல்கலைக் கழகம் டாக்டர் பட்டத்தை வழங்கியது. இதில் ஒரு நுட்பமான செய்தி என்னவென்றால், நாங்கள் இருவருமே "அண்ணாதுரை" பல்கலைக் கழகத்தில் பயின்று இந்தப் பட்டங்களைப் பெற்றோம் என்பதையே அந்த இரு பல்கலைக் கழகங்களும் இணைந்து உணர்த்துகின்றன.

"எப்படியென்றால், அண்ணாமலை பல்கலைக் கழகம் என்பதில் அண்ணாமலையில் உள்ள ''மலை''யை அகற்றினால் அண்ணா என்றாகிறது. அதை போல் மதுரை பல்கலைக் கழகத்தில் மதுரையில் உள்ள "ம"வை நீக்கினால் 'துரை' என்றாகிறது. இந்த இரண்டையும் இணைத்தால் "அண்ணா துரை" என்றாகிறது அல்லவா! எனவேதான் நாங்கள் இருவரும் அண்ணாதுரை பல்கலைக் கழகத்தில் பயின்று பட்டம் பெற்றோம் என்று சொன்னேன்."

கூட்டத்தில் கரகோஷம் விண்ணை முட்டிற்று.

("மேடை வேடிக்கை" என்ற நூலிலிருந்து)





• முத்துராமலிங்கதேவர்

# தேவர் காலடி மண்ணே...

● பூரண சுதந்திரம் கிடைப்பதற்குப் பத்து வருடங்கள் முன்பு இடைக்கால ஏற்பாடாக, மாநிலங்களில் தேர்தல் நடத்த முன்வந்தது ஆங்கிலேய அரசு. அப்போது முதுகுளத்தூர் சட்டமன்றத் தொகுதிக்கு, ஜஸ்டிஸ் கட்சி சார்பில் போட்டியிட்டவர் ராமநாதபுரம் ராஜா! தேர்தலில் அவருக்குக் கிடைத்தது படுதோல்வி! வென்றவர் : 29 வயது இளைஞர் முத்துராமலிங்கத் தேவர்!

● அடிமை இந்தியாவில் இரண்டு பேருக்குத்தான் பேச்சுரிமையைத் தடைசெய்தது ஆங்கிலேய அரசு. வடக்கே திலகர்; தெற்கே தேவர்! தேவர் பேச்சு அத்தனை சக்திவாய்ந்தது!

● தேசப்பற்றும் தெய்வப்பற்றும் மிக்க தேவர், ஆங்கில மொழியில் அந்நாளில் பெரும்புலமை வாய்ந்தவர்! "உலகத்தில் பெரும் பகுதியை ஆங்கிலம் ஆளுகிறது; தேவர்தான் ஆங்கிலத்தை ஆள்பவர்" - சி.பி. ராமசாமி ஐயர்.

● தான் ஒரு ஜமீந்தாராக இருந்தாலும், ஜமீந்தார் முறை ஒழிப்புச் சட்டத்தை அரசு கொண்டு வந்த போது முழுதும் ஆதரித்தவர் தேவர். தமது ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்களை, உழவர்களுக்கே அன்பளிப்பாகத் தந்து விட்டவர்.

● நேதாஜி மீது அபார ஈடுபாடு தேவருக்கு. நேதாஜி, காங்கிரஸிலிருந்து விலகி பார்வர்டு பிளாக் ஆரம்பித்த போது, தமது காங்கிரஸ் ஈடுபாட்டை முற்றிலும் துறந்து, நேதாஜியைப் பின்பற்றினார்.

● பிரசாரத்துக்காகத் தொகுதிக்குச் செல்லாமலேயே தேர்தல்களில் வென்றவர் தேவர். சுதந்திரப் போராட்டத்தின் போது பத்தாண்டுகள் சிறையில் இருந்தவர். 55-ஆம் வயதில் (1963) காலமான போது தென்பாண்டி மக்களின் தெய்வமாகவே மதிக்கப்பட்டவர்.

● தேவர் நடந்த பாதையின் மண்ணெடுத்து நெற்றியில் இட்டுக் கொள்ளும் அளவுக்கு அவர் மீது பக்தி, தென் பாண்டி மக்களுக்கு!

● இதனால்தானோ என்னமோ, 'ஜெ' சென்னையில் தேவர் சிலை திறந்ததுடன் அவர் சமாதிக்கும் செல்கிறார்; அக்டோபர் 30ல். தேவர் பிறந்தது, இறந்தது இரண்டும் அதே தேதியில்!

— ஸ்ரீநிவாசன்

# கபில் தேவ் சாதனை கிங்!

கபில்தேவ் எப்போது ஓய்வு பெறப் போகிறார் என்பது பெரிய சஸ்பென்ஸாக இருக்கிறது. இந்த சீசனில் அவர் பெயர் இந்தியக் குழுவில் அறிவிக்கப்படவே இல்லை! "புகழின் உச்சியில் இருக்கும் போதே ரிட்டயர்மென்ட்டை அறிவிக்க வேண்டும்தான். ஆனால் அவரது சாதனைகளை எல்லாம் மறந்து விட்டு இருப்பது நியாயமே இல்லை!" என்கிறார் கபில் ரசிகர் பரத். சிலவற்றைப் பட்டியலிடுகிறார் :



◆ இந்தியா-ஸ்ரீலங்கா ஆசியக் கோப்பை (1991)யில் ஹாட்ரிக் சாதனை.

◆ ஜிம்பாப்வேக்கு எதிராக அதிகபட்ச ஸ்கோர் 175 (டர்ன்பிரிட்ஜ்வெல்ஸில்).

◆ ரிச்சர்ட் ஹாட்லியின் 431 விக்கெட்டுகளைத் தாண்டிய சாதனை.

◆ ஒருநாள் கிரிக்கெட் போட்டிகளில் 250க்கும் மேற்பட்ட விக்கெட்டுகள்.

◆ உலகக் கோப்பையை முதல் முதலாக இந்தியாவுக்குப் பெற்றுத் தந்த தலைமை.

◆ இந்தப் பதினைந்து ஆண்டுகளில் ஃபிட்னஸ் பிராப்ளம் என்று (ஒரே ஒரு டெஸ்ட் மாட்ச் தவிர) ஆடாமல் இருந்ததில்லை.

◆ ரெக்கார்டுகளுக்காக விளையாடாமல், நாட்டுக்காக விளையாடுகிற முனைப்பு.

'கபில்' என்றதுமே இதயத் துடிப்பு அதிகரிக்கும் பலருக்கு. என்று ரிடயர் ஆகிறாரோ! இன்று வேர்ல்ட்-டெல் டிவியில் காமென்டரி சொல்ல அழைக்கப்பட்டிருக்கிறார்.

— சாருகேசி

மணமகள் தேவை
வடமாள், கார்த்திகை, 38/175, 2,000/- பிரைவேட் கம்பெனி வரனுக்கு வேலைக்குச் செல்லும் பெண் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். எழுதவும். பெட்டி எண் : 4013 C/o. **கெட்டி மேளம்,** சென்னை - 4.

For a well employed decent family boy, B. Sc., PGDMLT employed, Vadama, Srivasta 26, 150 cm. Subsect no bar. Reply to Box No. 4002, C/o. **KETTY MELAM**, Madras - 4.

மணமகள் தேவை
36 வயதுண்டய +2 வரை படித்த வன்னிய குல க்ஷத்திரிய இனத்தை சேர்ந்த பெண்ணுக்கு, இதே இனத்தை சேர்ந்த மணமகன் தேவை. பெண்ணுக்கு ஜாதகம் இல்லை. எழுதவும். பெட்டி எண் : 30/2 C/o. **கெட்டி மேளம்,** சென்னை - 4.

Suitable Alliance for Vadamal, Vadoolam 26/115 P. G. Working, home loving, good looking accomplished girl, Lagna ketha, Write to Box No. 3009, C/o. **KETTY MELAM**, Madras - 4.

உச்சநீதி மன்றம்
இதெல்லாம் தேவைப்படாத ஆராய்ச்சி... எடுத்துக்கிட்டு போ.... தடையை வைச்சுக்கிட்டு சமாளி...!
மசூதிக்குப்பின் கோயில் வந்ததா? கோயிலுக்குப் பின் மசூதி வந்ததா?
புனிதத் தலங்களையும் அரசுடைமையாக்கும் அதிகாரம்
பாமரர்








# கல்கி



1994
நவம்பர் 6
பவ
ஐப்பசி 20
மலர் : 53
இதழ் : 14

## திஸ்ஸநாயக படுகொலை!

ராஜீவ் காந்தி படுகொலைக்கும் திஸ்ஸநாயக கொலைக்கும் வித்தியாசம் ஏதும் இல்லாததால் மக்களின் சுட்டுவிரல்கள் விடுதலைப் புலிகள் பக்கமே நீள்கின்றன. ஜெயவர்த்தன ஆட்சியில் இந்தியா இலங்கை ஒப்பந்தம் ஏற்பட, அன்றைய அமைச்சர் திஸ்ஸநாயக முக்கிய காரண புருஷராக இருந்தார். ராஜீவ் கையெழுத்திட்டு, அமைதிப்படை அனுப்பி புலிகளின் வெறுப்புக்கு இலக்கானார். அவ்வாறே திஸ்ஸநாயகவும். இந்தப் படுகொலையில் தங்களுக்குச் சம்பந்தமில்லை என்று புலிகள் மறுத்தாலும் ஒரு பக்கம் சமாதானப் பேச்சு வார்த்தை என்று கூறும்போதே, கிடைக்கின்ற அவகாசத்தைப் பயன்படுத்தி தங்களைப் பலப்படுத்திக் கொள்வதும், விரோதிகளைத் தீர்த்துக் கட்ட அந்தச் சந்தர்ப்பத்தை உபயோகித்துக் கொள்வதும் புலிகளுக்கு வாடிக்கைதான்.

இந்தப் படுகொலையையொட்டி புலிகளுடன் சந்திரிகா அரசு நடத்திய சமாதானப் பேச்சு வார்த்தை தடைப்பட்டுப் போனது வியப்பில்லை. அதே நேரத்தில் ஜனாதிபதி தேர்தல் ஒத்திப் போடப்படாதது, ஜனநாயகம், பயங்கரவாதத்துக்கு அடிபணிந்து விடாது என்பதை உணர்த்துகிறது. திஸ்ஸநாயகவின் மனைவி தேர்தல் களத்தில் இறங்கி இருப்பது அனுதாப அலையைப் பயன்படுத்தி, வாரிசு அரசியலை வளர்ப்பதாக இருக்கலாம். என்றாலும் திஸ்ஸநாயகவைப் படுகொலை செய்த பாதகர்களுக்கு விடுக்கப்படும் ஒரு சவால் என்றும் கொள்ளலாம்.

ஸ்ரீலங்கா ஜனநாயகம், சோதனைகளில் வென்று பலம் பெறட்டும்.

## எம்.ஜி.ஆர். யாருக்குச் சொந்தம்?

மூப்பனாரும் கலந்து கொள்ளவிருந்த எம்.ஜி.ஆர். அறக்கட்டளை தொடக்க விழாவை, ஆட்சி அதிகாரத்தைப் பயன்படுத்தி நடக்க விடாமல் செய்ததில் ஜெயலலிதா பெற்ற வெற்றி, நேர்மையான விதத்தில் அடைந்ததல்ல. அழுகுணி ஆட்டமே! அறக்கட்டளை தொடக்க விழா காரணமாக அமைதி குலையும் என்றோ, சட்ட ஒழுங்கு பிரச்னை உருவாகும் என்றோ கருத எந்தவித முகாந்திரமும் இல்லை. இருந்திருந்தால், அது நிரூபிக்கப்படவில்லை. எம்.ஜி.ஆர். இன்று கோடிக்கணக்கான மக்களின் இதயங்களில் வீற்றிருப்பவர். தமிழக மக்கள் அனைவருக்கும் சொந்தமானவர். அ.தி.மு.க.வின் ஏகபோக உரிமையாக அவரைக் கருத முடியாது. வேறு யாருமே அவருக்குச் சொந்தம் கொண்டாடக் கூடாது; அவர் பெயரால் ஏதொன்றும் செய்யக் கூடாது என்ற முடிவுக்கு வர ஜெயலலிதாவுக்கோ அவரது அரசுக்கோ உரிமை இல்லை. இதை ஜெயலலிதா மறக்கும் போது அவர் எம்.ஜி.ஆர். சிலைக்கு மாலை அணிவிப்பது கூட போலி நாடகமாகி விடுகிறது.

## போலீஸைக் குறைகூறாதீர்கள்!

பிரும்மாண்டமான புதிய போலீஸ் தலைமையகக் கட்டடத்துக்கு அடிக்கல் நாட்டிய முதல்வர், "மக்கள் குறைகூறும்படி நடந்து கொள்ளாதீர்கள்" என்று போலீஸுக்கு அறிவுரை வழங்குவதற்குப் பதில், "போலீஸைக் குறைகூறாதீர்கள்" என்று மக்களுக்கு அறிவுரை வழங்கியுள்ளார்! புதிய கட்டடத்தின் மாடல் பார்க்க பிரமிப்பாக இருக்கிறது. ஆனால் அதைக் கட்ட, சென்னை சுற்றுவட்டாரத்தில் வேறு இடம் கிடைக்கவில்லையா? பாரம்பரியப் பெருமையும், எழிலும் மிக்க ஒரு மாளிகை இதற்காகத் தகர்க்கப்பட வேண்டுமா? அதைப் புனருத்தாரணம் செய்து பாதுகாக்கக் கூடாதா? புதிய, பலமாடிக் கட்டடம் கடற்கரையில் அமைவதால் கடற் காற்று நகருக்குள் புகுவது கணிசமான அளவில் தடைப்படுமே? இவையெல்லாம் நல்லதைச் சிந்திக்கும், நல்ல உள்ளங்கள் எழுப்பும், நியாயமான கேள்விகள். ஆனால் நல்ல வார்த்தைகள் அலட்சியப்படுத்தப்படுவது இன்று வாடிக்கையாகி விட்டது. 'ஜெ' கூறுவது மட்டுமே நல்ல வார்த்தை என்றாகி விட்டது! எனவே, போக்கிரிகள் பலர் போலீஸில் இருந்தால் என்ன? நல்லவர்களும் இருப்பதை எண்ணி மகிழுங்கள்!

தமிழ்த்திரு நாடு
தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.



# வை.கோ. வீட்டில் இரண்டு புலிகள்!

● பா.ம.க. தலைவர் டாக்டர் ராமதாஸ் திண்டிவனத்திலிருக்கும் போது கண்டிப்பாக டிஸ்பென்ஸரியில் வைத்தியம் பார்ப்பார்.

● தனது 19-வது வயதில் சினிமா பார்க்கத் துவங்கிய முன்னாள் அமைச்சர் ராஜாராம், ரிலீஸாகும் எல்லாப் படங்களையும் பார்த்து விடுகிறார். அமைச்சராக இருக்கும் போது ஸ்பெஷல் ஷோ போட்டுப் பார்ப்பதுண்டு. இப்போதெல்லாம் தியேட்டர்தான். இவர் பார்க்காது விட்டுப் போன தமிழ்ப் படங்கள் ஒன்றிரண்டுதான் இருக்கும் என்கிறார்கள்.

● எம்.ஜி.ஆர். காலத்தில் பரபரப்பான அரசியல்வாதியாக இருந்த ஜேப்பியார் இப்போது சத்யா பொறியியல் கல்லூரி தவிர செயிண்ட் ஜோஸப் பொறியியல் கல்லூரி என்ற ஒன்றையும் துவக்கியிருக்கிறார். இவரது கல்லூரியில், படிப்பை விட ஒழுக்கத்திற்குத்தான் முதலிடமாம். ஒழுக்கம் தவறுபவர்களுக்கும், தவறு செய்பவர்களுக்கும் தண்டனை என்ன தெரியுமா? சாப்பாடு போட்டு இருட்டறையில் அடைத்து விடுவதுதான்! (காலேஜா? ஆர்மி கேம்ப்பா?)

● மத்திய நலத்துறை அமைச்சர் தங்கபாலு, தமக்குக் கொடுக்கப்படும் பரிசுகளை, விழா முடியும் போது அமைப்பாளர்களிடமே கொடுத்து, தன் நினைவாக வைத்துக் கொள்ளச் சொல்லி விடுகிறார். தமக்குப் போடப்படும் துண்டுகளையும் சால்வைகளையும் மாதத்திற்கொரு முறை அநாதை நிலையங்களுக்குக் கொடுத்து விடுகிறார்.

● பி.ஹெச். பாண்டியன் தமது வீட்டில் ஏழு நாய்கள் வளர்க்கிறார். "நிறைய செலவாகுமே!" என்று கேட்டால், "24 மணி நேரத்துக்கு மூன்று ஷிப்ட் வாட்ச் மேன் போடணும். அதற்கும் 2500 ரூபாய்தான் செலவாகும். நாய்கள் பராமரிப்புக்கும் அவ்வளவுதான் ஆகிறது. மேலும், நாய்களின் எஜமான விசுவாசம் சந்தேகத்துக்கு அப்பாற் பட்டதல்லவா" என்று சொல்லியிருக்கிறார்.

● தி.மு.க. சட்டமன்ற உறுப்பினர் பரிதி இளம்வழுதி திருவல்லிக்கேணி ரத்னா ஹோட்டல் சாம்பார் ரசிகர். ஊரிலிருக்கும் போது தினசரி அந்த ஹோட்டலில் மாலை ஆஜராகி விடுவார்.

● சுப்பிரமணியசுவாமி மலையாளத்தில் 'எக்ஸ்பிரஸ்' என்ற பத்திரிகை நடத்துகிறார். இதன் இயக்குனர்களுள் ஒருவர் சந்திரலேகா.

● மாறி வரும் அரசியல் சூழ்நிலையில், புலிகளுடன் தமது நெருக்கத்தைக் குறைத்துக் கொண்டு வரும் வைகோவின் வீட்டில், அவரது தனியறையில் இரண்டு புலிகள் விளையாடுவது போன்ற பெயிண்டிங் உள்ளது!

● வாழப்பாடியார் விரும்பிச் சாப்பிடுவது பாலுக்குப் பதில் எலுமிச்சை ஜூஸ் கலந்த 'லெமன் டீ'.

● சமீபத்தில் வாழப்பாடி முன்னிலையில் காங்கிரஸில் சேர்ந்திருக்கும் ராஜசேகரன், தீவிர சிவாஜி ரசிகர். சிவாஜி ரசிகர் மன்றத் தலைவராக இருந்து, அவர் காங்கிரஸிலிருந்து விலகிய போது தாமும் விலகி, ஜனதா தளத்தில் சேர்ந்த போது தாமும் சேர்ந்து, அதிலிருந்து விலகிய போது தாமும் விலகியவர். இப்போது மட்டும் சிவாஜி இல்லாத காங்கிரஸில் ஏன் சேர்ந்தார்? "சிவாஜிக்கு என்றும் என் இதயத்தில் இடமுண்டு. இந்த காங்கிரஸ் பிரவேசம் பற்றி நோ கமெண்ட்ஸ்!" என்கிறார்.

— ப்ரியன்

# Kalki Shopping Page

## BALDNESS
**CAN NOW BE TREATED**






## ROMA
**Herbal Hair Tonic**

available at all Chemists & General Stores

- ★ Stops Hair Fall.
- ★ Promotes thick & long Hair growth.
- ★ Darkens grey hair.

MEDICALLY TESTED & CERTIFIED

---

பூஜை பண்டிகை மற்றும் சுப காலங்களில் ஏற்றிடுவீர்

அம்பிகா கற்பூரம்



AMBIKA KARPOORAM
IS A CHOICE OF
DEVOTEES

**SURESH INDUSTRIES,**
**38, THATHAMUTHAIAPPAN STREET,**
**MADRAS - 600 001.**
**PHONE : 517640**

---



## மகா சிவ வாக்கிய நாடி
சோதிடர்கள்

**M.R. அன்பழகன் – K. மதியழகன்**
(வைதீஸ்வரன் கோயில்)

பழங்கால ஓலைச் சுவடிகளின் மூலமாக கல்வி, தொழில், உத்தியோகம், திருமணம், ஆகிய நன்மைகளையும், கடன், வழக்கு, வியாதி, எதிரிகளாகிய தீமைகளையும் இவற்றின் நிவர்த்தியும் படித்து எழுதி தரப்படும். ஜாதகம் இல்லாதவர்களுக்கு கைபெருவிரல் ரேகையைக் கொண்டு ஜாதகம் எழுதி தரப்படும்.

B பிளாக், No. 9, 2 வது மாடி,
46, பாளையக்காரன் தெரு,
கோடம்பாக்கம், சென்னை - 600 024.
(பவர் ஹவுஸ் பஸ் ஸ்டாப்)

M.C. ADS

# Kalki Shopping Page

# Kalki Shopping Page

ஒரு மனித உடல் என்ன விலை பெறும்னு நினைக்கறீங்க...? நம் உடம்புல உள்ள ஆதார பொருள்களுக்குத் (ரசாயன மற்றும் உயிரியல் வகையிலானவை) தனித் தனியே மதிப்பு போட்டால் உடம்பின் விலை ஆறாயிரம் ட்ரில்லியன் டாலர்! (ட்ரில்லியன் என்கிறது 1,000,000,000 ஆயிரம் மில்லியன்) இத்தனை மதிப்பான ஒரு விஷயத்தை நாம எப்படி உபயோகிக்கறோம்னு கொஞ்சம் யோசிச்சுப் பார்க்கணும்...

நம்ம தாத்தாக்களும் பாட்டிகளும் உடம்பை கவனிச்சுக்கிட்ட மாதிரி இப்ப கவனிச்சுக்க நமக்குப் பொறுமையும் இல்லை; நேரமும் இல்லை! 'இன்னிக்குத் தூங்கி நேற்றைக்கு எழுந்துக்கணும்'னு சொல்லக் கூடிய அளவுக்கு ஒரு சூப்பர் ஃபாஸ்ட் வாழ்க்கை முறை! விளைவு...? நோய், நோய், மேலும் நோய்!

உதாரணமா ஒரு சின்ன புள்ளி விவரம்:

எட்டு வருஷத்துக்கு முந்தி எங்க கிட்ட வந்த இதய நோயாளிகள்ல ஒருத்தர் கூட ஐம்பது வயசுக்குக் குறைஞ்சவரில்ல. ஆனால் இப்போ... தினமும் ஒரு முப்பது வயதுக்காரராவது ஹார்ட் அட்டாக் வந்து அட்மிட் ஆகிறார்! போதாக் குறைக்கு வெளி நாடுகள்லயும் இந்தியர்களுக்குத்தான் அதிகமா ஹார்ட் அட்டாக் வருதுன்னு ஒரு தகவல்!

இதய நோய்க்குப் பல காரணங்கள் இருக்கு. வம்சாவளியா அது வரலாம். பெண்களை விட ஆண்களுக்கு இந்த அபாயம் எட்டு முதல் பத்து மடங்கு அதிகம்; 'A' வகை பர்சனாலிடியாக நீங்கள் இருந்தால் – அதாவது Anger, Ambition, Anxiety, Agitation என்ற 'A' குணங்கள் தூக்கலாக இருந்தால் ஹார்ட் அட்டாக் வரும் வாய்ப்பும் தூக்கல்!

நம்ம வாழ்க்கையே இந்த மாதிரி சிக்கல்களுடன் மாற்றங்களும் நிறைஞ்சிருக்க, ஆரோக்கியத்துக்கு டாட்டாதான்!

வாழ்க்கை முறை மாற்றங்கள் மூலம் இதய நோய் வராமல் தடுக்க முடியும் என்றும் இதய நோயைக் குணப்படுத்தக் கூட முடியும்னும் மேலை நாடுகள்ல இப்ப உறுதியா சொல்றாங்க. அங்கே இருக்கிற பிரபல கார்டியலஜிஸ்ட் (இதய நோய் நிபுணர்) ஒருத்தர் இங்க நம்ம சுவாமி சச்சிதானந்தா கிட்டே வந்து தியானம் பழகிட்டுப் போயிருக்கார்.

சிகரட், மது, கொழுப்புச் சத்து குறைக்கணும், வாக்கிங் போகணும், தியானம் செய்யணும், மனசை 'Calm' ஆக வச்சுக்கணும் என்கிறதெல்லாம் ஏற்கெனவே நீங்க நிறைய கேள்விப் பட்டிருப்பீங்க. இதெல்லாம் செய்யறதோட, முப்பத்தஞ்சு வயசைத் தொடும் போது, ஒரு கம்ப்ளீட் ஹெல்த் செக் அப் பண்ணிக்கறது இந்தக் காலத்துல அவசியம் தேவை.

நம்ம காரையோ, ஸ்கூட்டரையோ, மோபெட்டையோ தவறாம சர்வீஸிங்குக்குக் குடுத்து, சின்ன ரிப்பேர்களைச் சரி செய்யறதால, மேஜர் பிராப்ளம் வராம தடுக்க முடியுது இல்லையா? அதே போல தான் உடம்பும்... நடுத்தர வயசை எட்டின பிறகு, வருஷத்துக்கு ஒரு செக் அப் செய்துக்கிட்டா, 'மைல்ட் டயபடீஸ்' இருந்தாலோ பிளட் பிரஷர் முளை விட ஆரம்பித்திருந்தாலோ கண்டு பிடிச்சு, பிரச்னை பெரிசாகாம காப்பாத்திடலாம்.

ஆனால், நம்மில் எல்லாருமே டாக்டர்

கள் உள்பட பொறுக்க முடியாத அளவுக்குப் பிரச்னை வளரும் வரைக்கும் பேசாமல்தான் இருக்கோம். வருமுன் காக்கறதுக்காக டாக்டர்கிட்டே போகறதும் செலவு செய்யறதும் எப்படி நமக்குக் கை வரும்!

அதுவும் பெண்கள் வாரத்தில் ஏழு நாளும் குறைஞ்ச பட்சம் பன்னிரண்டு மணி நேரங்களாவது உழைக்கும் மிஷின் களாகவே பெரும்பாலும் இருக்காங்க. இந்த 'மிஷின்' எப்போது வேண்டுமானாலும் பிரேக் டவுன் ஆகிவிடக் கூடிய நிலைமையில விட்டுடலாமா? வரும் முன் காப்பது என்பது நடைமுறை சாத்தியமாய் இருக்கும்போது ஏன் அந்தப் பாதையைத் தேர்ந்தெடுக்கக் கூடாது?

வருடத்தில் ஒரு நாளை ஒதுக்கினால் போதும். B.P, ஷுகர், ஹார்ட் பிராப்ளம் போன்றவை இருக்குதா என்பதைப் பரி சோதனை செய்து கண்டு பிடிச்சுடலாம். பெண்களுக்கு 'பாப் ஸ்மியர்', 'மாமோகிராம்' டெஸ்டுகள் செய்வதன் மூலம் உடம்புக்குள்ள ஓசைப் படாம வளரும் கர்ப்பப்பை அல்லது மார்பகப் புற்று நோயைக் கண்டு பிடிச் சுடலாம்.

எந்த நோயையுமே – கான்ஸர் உள்பட – ஆரம்ப நிலை யிலேயே கண்டு பிடிச்சுட்டா முழுமையா குணப்படுத்திடலாம்.

இந்த டெஸ்ட்களையெல்லாம் உங்க குடும்ப டாக்டரின் உதவியோடயே செய்துக் கலாம்.

கொஞ்சம் பணம் செலவாகத்தான் செய்யும். ஆனால் ஆரோக்கியத்துக்காகச் செய்யற முதலீடா அதை நினைச்சுக்கறது தப்பில்லையே!

**–டாக்டர் மிஸ்ரா, டாக்டர் ஹர்நாத், டாக்டர் உதயா பாலசுப்ரமணியன், டாக்டர் வருணா கருணா.**

(அப்போலோ மருத்துவ மனை, சென்னை)

## டுத்தலாமே!

**பி.கு:** அப்போலாவில் முழுமையான ஹெல்த் செக்-அப் செய்து கொள்ள ஒரு கிஃப்ட் கூப்பன் முறையைச் சமீபத் தில் அறிமுகப் படுத்தி உள்ளார்கள். இந்த கூப்பனை வாங்கி அன்புக்குரியவர் களுக்கு ஆரோக்கியப் பரிசு தரலாம்!

# விரிவுரை வேந்தர்!

சூரியனைத் தோற்கடித்த சுறு சுறுப்பு!
சொற்பொழிவில் எப்போதும் விறுவிறுப்பு!
ஊர் மகிழ வைத்த ஒரு கலகலப்பு!
ஊடே ஓர் அரசியலின் சலசலப்பு!
'வேர் யார் தான் இதற்கெல்லாம்?' என்று உள்ளம்
வினா விடுத்தால் 'வாரியார்' தான் விடையாய்
நின்றார்!
வேறுயார்தான் அவரைப் போல் விளக்க! ஞான
வேந்தர் புகழ் எந்நாளும் விளங்கி வாழும்!



சொற்ப ஓய்வு இன்றி சொற் பொழிவைச் செய்தார்!
சிவப் பிழிவும் தவப் பொலிவும் கண்டோமே நாம்!
அற்புதமாய் ஆத்திகமாம் வானகத்தை
அலங்கரித்த முழுநிலவாம் சுவாமிகள்தான்
கற்கோயில் திருப்பணிக்கும் கல்வி கற்கும்
கலா சாலை பொதுப் பணிக்கும் தனது பேச்சு
நற்பணியைச் செய்து வந்தார்! அந்த பக்தி
நாயகரை வணங்கி அவர் வழி நடப்போம்!

**- மதிவண்ணன்**





"பட்டுக்கோட்டை பெரியப்பாவை எடுத்த விசு, நாகர்கோவிலை வைச்சுப் படம் எடுத்தா என்ன பேர் வைப்பார்?"

"நாகர்கோவில் நாத்தனார்!"

- எஸ். நாரம்புநாதன்





"வீட்டுல என் மனைவி கிட்டேயும் அம்மாகிட்டேயும் மாட்டிக்கிட்டு முழிக்கிறேன்!"

"ஏன்?"

"அவங்க சண்டை போடறப்ப நான் விசிலடிச்சு உற்சாகப்படுத்தணுமாம்!"

- கொங்கணாபுரம்
வே. செந்தில்





"வரவர எங்க ஆபீஸிலே எதுக்குத்தான் டிரீட் கேக்கறதுன்னு விவஸ்தையே இல்லாம போச்சு!"

"அப்படி எதுக்குத்தான் கேக்கறாங்க?"

"டீ. வி. எதிரொலியிலே என்னோட கடிதத்தை வாசிச்சாங்கங்கிறதுக்காகத்தான்!"

- இரா. சம்பத்குமார்



''தலைவருக்கு 'நடமாடும் பல்கலைக் கழகம்'னு பட்டம் கொடுத்தது தப்பாப் போச்சு!''

''ஏன்?''

''இப்போ, பல்கலைக்கழக மானியம் ஏதாச்சும் உண்டாங்கிறார்!''

– கீழை. அ. கதிர்வேல்

''எனக்கு வித்தியாசமான கனவா வருது டாக்டர்!''

''அது எப்படி?''

''ஒவ்வொரு கனவையும் ஒவ்வொரு கம்பெனிக்காரங்க 'ஸ்பான்ஸர்' பண்றாங்க. கனவுக்கு முன்னாடியும் பின்னாடியும் அவங்க விளம்பரமும் வருது!''

– ஆர். ரகோத்தமன்





''ஏம்பா! 'சாப்பாட்டில் கல் அதிகமா இருக்கே'ன்னு கேட்டாப் போதாதா, அதுக்கு மேலே 'குவாரி காண்ட்ராக்ட் எதுவும் எடுத்திருக்கிங்களா'ன்னு கேட்டு இன்ஸல்ட் பண்ணணுமா என்ன?''

– உ. ராஜாஜி



"விவாகரத்து விஷயமாக வக்கீலைக் கலந்து பேச நானும் அவரும் போனோம். நாலு மணி நேரம் காக்க வைத்து விட்டார்!"

"அப்புறம்...?"

"சேர்ந்து வாழறதா முடிவு பண்ணிட்டோம்!"

– தேனி எஸ். மாரியப்பன்





எங்கள் அருமை மகன் ராஜா இப்போது இல்லை. இரயில்வே
கிராஸிங்கில் அவன் செய்த ஒரு அவசரத் தவறு அவன்
வாழ்க்கையையே முடித்துவிட்டது.

இரயில்வே கிராஸிங்கை கடக்கும் போது ஏற்பட்ட ஒரு சோக
விபத்து அவனை விண்ணுலகத்திற்கு அனுப்பிவிட்டது.

ஆளில்லாத இரயில்வே கிராஸிங்கை நெருங்கும் போது
அவன் அவசரப்பட்டுவிட்டான். வந்துகொண்டிருக்கும் இரயிலின்
வேகத்தோடு போட்டியிட்டான். போட்டியில் தோற்றான்.
வாழ்க்கையை இழந்தான்.

ஒரு சிறிய தவறினால் எவ்வளவு பெரிய இழப்பு !

ஏன் அவன் அபாய எச்சரிக்கைகளை
கவனிக்கவில்லை?

ஏன் அவன் இரயில்வே கிராஸிங்கை நெருங்கும் போது
நிதானமாக செயல்படவில்லை

ஏன் அவன் இருப்புப்பாதையில் இரயில் வருகிறதா என்று
நின்று இருபுறமும் பார்த்து உறுதி செய்துகொள்ளவில்லை.

இந்த கேள்விகளை அவனிடம் இப்போது கேட்க
வெகு காலம் கடந்து விட்டது.

இந்த தவறை நீங்களும் செய்யக்கூடாது என்பதில்
உறுதியாக இருங்கள்.

இரயில்வே கிராஸிங்கை கடக்கையில் வேறு உலகத்திற்கு
சென்று விடாதீர்கள்

துயரத்தில் ஆழ்ந்திருக்கும் குடும்பம்.





**INDIAN RAILWAYS**

# ஏஸி அறை போல் இருப்போம்!

மனிதர்களில் பெரும்பாலோர் இன்று ஏதோ ஒரு உடல் நோயாலோ மன நோயாலோ பாதிக்கப்பட்டவர்களாகவே இருக்கிறோம். 'டென்ஷன்' 'பிரஷர்' என்கிற மருத்துவ முத்திரைகள், இருபதாம் நூற்றாண்டின் இருநயக் கொடைகள். 'கோபம்' 'கவலை' என்கிற முத்திரைகள் குத்தப்படாத முதுகுகளே உலகில் இல்லை என்றே கருதுகிறேன்.

ஏன் இந்த நிலைமை? உண்மைகளின் அடிப்படையில் வாழ்வைச் சிந்திக்காமல், அறிவு வழியில் வாழ்வைச் சமநிலையில் கொண்டு செல்லாமல் குழப்பிக் கொள்ளுவதே நம் எல்லா கோளாறுகளுக்கும் காரணம். இன்பம் x துன்பம், வெற்றி x தோல்வி, புகழ் x இகழ், நன்மை x தீமை என்ற இரட்டை எல்லைகளுக்கும் இழுபட்டு இழுபட்டு நாம் தளர்ந்து போய் விடுகிறோம்.

துலாக்கோலின் முள் போல நடுநிலையில் நிற்கும் சமநிலை யாருக்கு வாய்க்கிறதோ அவர்களுக்குத் துயரங்கள் இல்லை; அவலங்கள் இல்லை. மாறிக் கொண்டே இருக்கும் விஷயங்களைக் கொண்டு ஒரு முடிவுக்கு வராமல், நிலைத்தது எதுவோ அதன் அடிப்படையில் முடிவுக்கு வருவதே சமநிலையின் அச்சாணி.

சரீரம் மாறிக் கொண்டே இருப்பது. அதை மையமாகக் கொண்டு சிந்திக்கிற வரை இந்தச் சிக்கல் உண்டு. ஆத்மா மாறாதது. அதனை மையப்படுத்தி வாழ்வைச் சிந்தித்தால் சமநிலை சாத்தியமாகும்.

இந்தச் சமநிலை கைவரப் பெற்ற யோகியை 'ஸ்திதப் பிரக்ஞன்' என்று வர்ணிக்கிறது கீதை. மகிழ்ச்சியால் கூத்தாடுவதும், துக்கத்தால் துவண்டு போவதும் ஸ்திதப் பிரக்ஞனுக்குச் சம்மதம் இல்லை. நல்வினைப் பயன்களால் இன்பமும், தீவினைப் பயன்களால் துன்பமும் வருகிறது என்று யோகி நன்கு உணர்ந்து வைத்திருக்கிறான். எந்த இன்பமும் புலன்களின் தீனியேயொழிய அழியாத ஆன்மாவின் அனுபவம் அல்ல என்று ஞானி முடிவு செய்கிறான்.

சு
கி
சி
வ
ம்



க
ன
வு

மெ
ய்
ப்
ப
டு
ம்
9

பகலுக்குப் பின் இரவு வருவது எப்படி தவிர்க்க முடியாததோ, அது போல் இன்பத்துக்குப் பின் துன்பம் வருவது இயல்பானது என்று ஞானி உணருகிறான். வராதே என்று எவ்வளவு விரட்டினாலும் இரவு தலை நீட்டுவது போல் துக்கம் தாவிப் படருகிறது என்பதை அவன் நன்கு உணர்ந்திருக்கிறான். எனவே இன்பமோ, துன்பமோ - தன்னைப் பாதிக்காதபடி, உள்ளச் சமநிலையை இழக்காதபடி தன்னைச் சமைத்துக் கொள்கிறான். வெளியே வெயிலோ புயலோ எது அடித்தாலும் ஏர் கண்டிஷன் அறையில் இருப்பவன் ஒரே சீதோஷண நிலையில் இருப்பது போல, யோகியின் மனம் சமநிலையில் இருக்கிறது.

வீட்டில் பூனை வளர்த்தார் ஒரு பெரியவர். ஒருநாள் அது வீட்டையே துவம்சமாக்கிய பெரிய எலியைப் பிடித்துக் கொன்றது. ஆனந்தக் கூத்தாடினார் அவர். ஆனால் மறுநாள் நடந்த கொடுமை வேறு!

அந்தப் பெரியவர் ஆசை ஆசையாக வளர்த்த கிளியை அதே பூனை கவ்வி விட்டது. கழியை எடுத்துக் கொண்டு துரத்தித் துரத்தி ஓடினார். வாயில் அகப்பட்ட இரையை விட்டு விட பூனைக்கென்ன பைத்தியமா? துடிக்கத் துடிக்க கிளியைக் கவ்விக் கொண்டு ஓடியது.

சோர்ந்து போனார் வீட்டுக்காரர். பூனையைத் தன் ஜன்ம விரோதியாக நினைத்து வீட்டுக்கு வந்த போதெல்லாம் விரட்டி அடித்தார்.

சில நாள் போனதும் எங்கிருந்தோ வந்த மர்ந்த சிட்டுக் குருவியைப் பூனை தாவிப் பிடித்தது. வீட்டுக்காரர் வேடிக்கை பார்த்தபடி அமர்ந்திருந்தார். ஆனந்தக் கூத்தாடவும் இல்லை; ஆத்திர அவஸ்தையும் இல்லை.

வேண்டாத எலியைக் கொன்ற போது மகிழ்ச்சி. வேண்டிய கிளியைக் கொன்ற போது துக்கம். வேண்டுதல் - வேண்டாமை என்ற எல்லைக்குள் வராத குருவியைக் கொன்ற போது, அவருக்கு மகிழ்ச்சியும் இல்லை. துக்கமும் இல்லை. அது மட்டுமல்ல. பசிக்கு, தனக்கு வாய்த்த இரை எதுவானாலும் அதைப் பிடிப்பது பூனையின் இயல்பு என்ற அறிவு வந்து விட்டது அவருக்கு!

இந்த மனோநிலைதான் யோகியின் சமநிலையாக வர்ணிக்கப்படுகிறது. ஆனால், அந்த சமநிலையில் செயல் அழிந்து போவது கீதையின் கருத்தல்ல. சமநிலையில் நின்றபடி வாழ்வை நன்கு உணர்ந்து தெளிவுடன் செயல்படுவதே கீதையின் நோக்கம். ஒரு ஸ்திதப் பிரக்ஞன் இன்பத்தால் கவரப்படுவதும் இல்லை. துயரத்தால் மிரண்டு பின் வாங்குவதும் இல்லை. எதிர் எதிரான இந்த இரட்டைகள் 'துவந்தங்கள்' எல்லாவற்றிலும் இருந்து விடும்படி அர்ச்சுனனுக்குப் பகவான் போதிப்பதை கீதையின் 2-ம் அத்தியாயத்தின் 56-வது ஸ்லோகம் விளக்குகிறது.

பகவான் ராமகிருஷ்ணர் இந்த மனோநிலையை பங்களாவில் வேலை பார்க்கும் வேலைக்காரியின் மனோநிலை என்கிறார். 'எல்லாவற்றையும் நிர்வகிக்கிறாள். ஆனால் எதுவுமே தன்னுடையது இல்லை என்ற தெளிவில் பணியாற்றுகிறாள்' என்று வர்ணிக்கிறார்.

இது போல் பற்றின்றிப் பணிபுரிகிற மனோநிலையே கர்மயோகியின் நிலையாகிறது.

ஆசையின்றி செயல்படுவதே ஸ்திதப் பிரக்ஞன் இயல்பு என்பதைக் கீழ்க்கண்டவாறு கீதா வாஹினி விளக்குகிறது. "துணியில் இருக்கும் நூல்களை ஒன்றொன்றாகப் பிரித்து எடுத்து விட்டால் துணியில் மிஞ்சுவது என்ன? ஒன்றுமில்லை. மனது என்ற துணிக்கு ஆசைகளே ஊடும் பாவும். மனது மறையும் பொழுது ஸ்திதப் பிரக்ஞன் தோன்றுகிறான்" என்கிறார் ஸ்ரீசத்யசாய்.

இரண்டாம் அத்யாயம் ஐம்பத்தி ஐந்தாம் ஸ்லோகம் முதல் பகவான் சொல்கிறார். "பார்த்தா, மனத்தில் எழுகின்ற ஆசைகளையெல்லாம் அகற்றி ஆத்மாவில் ஆத்ம திருப்தி அடைந்திருப்பவன் ஸ்திதப் பிரக்ஞன் என்று சொல்லப்படுகிறான்."

"துன்பத்தில் துடிக்காத, இன்பத்தில் நாட்டமில்லாத பற்று, அச்சம், சினம் அற்ற உறுதியான உள்ளத்தை உடையவன் முனி எனப்படுகிறான்."

"ஆமை தன் அவயங்களை அடக்கிக் கொள்வது போல் பொருள்கள் இடத்தில் இருந்து பொறிகளை முழுதும் உள்ளிழுக்க வல்லவனுக்கு நிறை ஞானம் நிலை பெறுகிறது."

"ஒருமையுள் ஆமை போல் ஐந்தடக்கல் ஆற்றின்" என்ற திருக்குறள் இப்போது நினைவுக்கு வருமே!

(தொடரும்)

"என்னப்பா... இட்லி மல்லிகை பூப் போல் இருக்குமின்னு சொன்னே... நீலக் கலரா இருக்கே...!"

"சொட்டு நீலம் கொஞ்சம் அதிகமாயிடுச்சு, சார்!"

- தேனி எஸ். மாரியப்பன்






# முரண்பாடுகள்

**பூ. பெருமாள்சாமி**

அலுவலகத்தில் பகல் உணவு இடை வேளை.

சாப்பிட்டு முடிந்தபின் சேகருக்கு இன்னும் சொற்ப நேரம் இருந்தது. பொழுதைப் போக்கியாக வேண்டுமே என்பதற்காக உடன் பணிபுரியும் பாண்டி வாங்கி வந்திருந்த அரசியல் வார இதழைப் புரட்டினான்.

பதினைந்து நாட்களில் நடக்கவிருக்கும் இடைத் தேர்தல் சம்பந்தமாக ஒரு கட்டுரை. அதில் முக்கிய வேட்பாளர்கள் பற்றி குறிப்புகளும் அவர்களின் புகைப் படங்களும் இடம் பெற்றிருந்தன. தன் நண்பனின் புகைப்படமும் அதில் இடம் பெற்றிருந்ததைப் பார்த்ததும் சேகருக்குத் தன்னையும் அறியாமல் ஓர் இன்ப அதிர்ச்சி.

கோவை தனியார் கல்லூரி ஒன்றில் பட்டப்படிப்பு படிக்கும் போது சேகரும் சக்திவேலும் ஒன்றாகப் படித்தவர்கள். ஒரே அறையில் தங்காவிட்டாலும் ஒரே விடுதியில் மூன்று ஆண்டுகள் தங்கிப் படித்தவர்கள்.

தன் நண்பன் குறித்த செய்தியைப் பார்த்து வியந்து போயிருந்த சேகரிடம், "என்ன சேகர்! உங்களுக்கு என்ன ஆயிற்று! திடீரென்று ஏன் அதிர்ச்சி அடைந்தமாதிரி உட்கார்ந்திட்டீங்க?'' என்று பாண்டி வினவினார்.

''இதோ பாருங்க சார்... இந்த போட்டோவில் இருக்கிற சக்திவேல் பி.ஏ., படிக்கும்போது என் கிளாஸ்மெட். வர்ற சட்ட சபைக்கான இடைத் தேர்தல்லே ஒரு கட்சியின் வேட்பாளராக நிற்கிறார்'' என்று உற்சாகத்துடன் பாண்டியிடம் சொல்லி அந்தப் புகைப்படத்தைக் காட்டினான் சேகர்.

"என்ன சேகர் இது? உங்க பிரண்ட் நின்னது நின்னார், ஒரு ஜெயிக்கிற கட்சி வேட்பாளராக நின்னிருக்கக் கூடாதா? போயும் போயும் தோற்றுப் போகிற கட்சி வேட்பாளராக நின்னிருக்கிறாரே" என்று பாண்டி சர்வ சாதாரணமாகச் சொன்னதும் சேகருக்கு என்னவோபோல் ஆகிவிட்டது.

தன் நண்பன் வெற்றி பெறாது போகலாம். ஆனால் அங்கீகரிக்கப்பட்ட ஒரு கட்சி வேட்பாளராக நிற்கிறானே! இதுவே தனக்குப் பெருமைதரக் கூடிய விசயம்தான் என்று தனக்குத்தானே சந்தோசப்பட்டுக் கொண்டான் சேகர்.

அன்று மாலை அலுவலகத்திலிருந்து வீடு வந்து சேர்ந்த பின்னர் கூட சேகரின் எண்ணமெல்லாம் சக்திவேலைப்பற்றி வட்டமிட்டுக் கொண்டிருந்தது.

சேகரின் மனைவி, "என்னங்க! இன்னைக்கு ஆபீஸில் என்ன விசேஷம்? ஏக குஷியா இருக்கிங்களே!"

மனைவியிடம் தன் நண்பன் சக்திவேல் இடைத்தேர்தலில் போட்டியிடும் விஷயத்தை சேகர் ஆர்வமாகச் சொன்னான்.

விஷயத்தைக் கேட்டதும் சேகரின் மனைவிக்கு இவ்வளவுதானா என்று சப்பென்றாகி விட்டது.

"இதுக்குப் போய்த்தான் இத்தனை சந்தோசப்படறீங்களாக்கும்! நான் கூட லாட்டரியில்தான் ஏதாவது லட்சம் விழுந்திடுச்சுன்னு நெனச்சேன். அவரும் உங்களோடு படிச்சவர்தான். எம்.எல்.ஏ., ஆனாருன்னா நாளைக்கு மந்திரியே ஆகிவிடுவார். நீங்க என்ன ஆகப் போறீங்க? ரிடையர் ஆகற வரைக்கும் இதே கிளர்க் வேலைதான்" என்று ஒரே மூச்சில் தன் ஆதங்கத்தைக் கொட்டித்தீர்த்தாள்.

தன் மனைவி இந்த விஷயத்தை இப்படியொரு கண்ணோட்டத்தில் பார்ப்பாள்

என்று சேகர் கிஞ்சித்தும் எதிர்பார்க்கவில்லை. அன்று இரவு வெகு நேரம்வரை சேகருக்கு உறக்கம் பிடிக்கவில்லை.

கல்லூரி நாட்களில் தானும் சக்திவேலும் அரசியல் சம்பந்தமாகப் பேசிய விஷயங்கள் எல்லாம் ஒவ்வொன்றாக நினைவிற்கு வந்தன.

அவர்கள் பட்டப் படிப்பு படித்துக் கொண்டிருந்தபோது தமிழகத்தில் நடந்த முக்கிய அரசியல் திருப்பமும் அவன் நினைவிற்கு வந்தது.

ஆட்சியிலிருந்த மாநிலக் கட்சியிலிருந்து முக்கியப் பிரமுகர் ஒருவர் வெளியேற்றப்பட்டது. அடுத்து வந்த இடைத் தேர்தலில் வெளியேற்றப்பட்டவர் நிறுத்திய வேட்பாளர் பெருவாரியான ஓட்டு வித்யாசத்தில் வெற்றி பெற்று, அடுத்து வந்த பொதுத் தேர்தலில் ஆட்சியையே பிடித்து விட்டார்.



மேற்கண்ட அரசியல் திருப்பங்கள் நடந்த சமயத்தில் மாநிலச் செய்திகளைக் கேட்டுக் கொண்டும், அன்றாட தினசரியில் வரும் செய்திகளைப் படித்துக் கொண்டும் சக்திவேலுடன் தான் விவாதித்துக் கொண்டதெல்லாம் மலரும் நினைவுகளா இவன் மனத்திரையில் வந்து போய்க் கொண்டிருந்தன.

தன் நண்பன் சக்திவேல் பற்றி யாரிடம் பேசினாலும் மற்றவர்கள் மிகச் சாதாரணமாக எடுத்துக் கொள்வது சேகருக்கு மிகுந்த ஏமாற்றம் அளிப்பதாக இருந்தது.

தேர்தல் முடியும் வரை ஒவ்வொரு நாளும் சேகர் மிகுந்த அக்கறையுடன் தினசரிகளைப் பார்த்தான். அதில் தன் நண்பன் சக்திவேல் பற்றி வரும் செய்திகளை ஆர்வமுடன் படித்தான்.

தேர்தல் முடிந்ததும் அவசியம் சக்திவேலைப் போய் பார்க்க வேண்டும். அரசியலில் இவ்வளவு தூரம் முன்னுக்கு வந்தது குறித்து மனம் திறந்து பாராட்ட வேண்டும் என்று சேகர் தீர்க்கமாக முடிவு செய்து கொண்டான்.

தேர்தல் முடிவு வெளியானது. சக்திவேல் டெபாசிட் பெறுவதே பெரும்பாடாய்ப் போயிற்று. அந்தக் கட்சி அவனை நிறுத்தியதால்தான் இந்த அளவுக்காவது ஓட்டுப் பெற முடிந்தது. வேறுயாரையாவது அந்தக் கட்சி, வேட்பாளராக நிறுத்தியிருக்கும் பட்சத்தில் டெபாசிட்டே

● உலகத்திலேயே அதிகளவில் பெண் எம்.பி.க்கள் கொண்ட நாடு என்ற பெருமை சுவீடனுக்கு கிடைத்துள்ளது. மொத்தம் 349 இடங்களைக் கொண்ட சுவீடன் நாடாளுமன்றத்தில் பெண் எம்.பி.க்களின் எண்ணிக்கை 141. மேற்கத்திய நாடுகள் எதிலும் காணப்படாத அளவுக்கு பெண்களுக்கு அதிகபட்ச அரசியல் அதிகாரம் கிடைத்திருப்பது சுவீடனில் தான்!

- பி.ராஜே ன்.



● **மத்திய பிரதேச அமைச்சரான ராஜேந்திரகுமார் சிங்கின் ஒரு நாளைய பெட்ரோல் செலவு ரூ.5900! நம்ப முடிகிறதா? அதாவது ஒரு நாளின் 24 மணி நேரமும் அமைச்சர் காரிலேயே பயணம் செய்து கொண்டிருக்கிறார்! பிழைக்கத் தெரியாத ஒருவரும் மத்திய பிரதேச அமைச்சரவையில் இருக்கிறார். ராஜேந்திர நஹதா என்ற அமைச்சரின் மாத பெட்ரோல் பில் ரூ.6915 மட்டும்.**

**ஆதாரம்: தி வீக்**

**– எஸ்.ஆலன்**

போயிருக்கும் என்று சில தரமான அரசியல் பத்திரிகைகளே எழுதியிருந்தன.

"நான் இன்றைக்கு சக்திவேலைப் போய் பார்த்துட்டு வரலாமென்றிருக்கிறேன்" என்று சேகர் சொன்னதுதான் தாமதம்.

"என்ன, என்ன சொன்னீங்க? தேர்தல் முடிஞ்சு ரெண்டு வாரமாச்சு, இந்த ரெண்டு வாரமா சக்திவேலைப் பற்றிப் பேசாமல் இருக்கீங்களேன்னு நிம்மதியாய் இருந்தேன். மீண்டும் அவரோட பல்லவியைப் பாட ஆரம்பிச்சுட்டீங்க!" என்று சேகரின் மனைவி ஆவேசமாகக் குரல் கொடுக்க ஆரம்பித்து விட்டாள்.

இனியும் தன் மனைவியிடம் இதுபற்றிப் பேசுவது புத்திசாலித்தனமான காரியம் அல்ல என்று முடிவுக்கு வந்தான் சேகர். ஆனால் போய்ப் பார்த்து விடுவதில் உறுதியாக இருந்தான். தன் மனைவியிடம் சொல்லிக் கொள்ளாமலேயே நண்பனைப் பார்க்க புறப்பட்டு விட்டான்.

சக்திவேல் ஊரை அடைய பஸ்ஸில் எப்படியும் இரண்டரை மணி நேரமாவது பிரயாணம் செய்தாக வேண்டும்.

பஸ்ஸை விட்டு இறங்கியதும் சேகருக்கு அவன் வீட்டைக் கண்டுபிடிப்பது அவ்வளவு ஒன்றும் சிரமமாக இருக்கவில்லை.

சக்திவேலின் வீடு எங்கு என்று ஒருவரைக் கேட்டவுடனே அவரிடம் தனக்கு ஒருவித மரியாதை ஏற்பட்டதை சேகரால் உணர முடிந்தது.

சக்திவேலின் வீட்டை அடைந்ததும் தன் நண்பன் வீட்டை அடைந்த மாதிரி சேகரால் உணர முடியவில்லை. எங்கேயோ ஓர் அலுவலகத்திற்கு வேலை தேடிப் போனது மாதிரியானதொரு உணர்வு!

ஆபீஸ்பாய் போல் இருக்கிற பதினேழு வயது மதிக்கத்தக்க ஓர் இளைஞன், "நீங்க..." என்று சேகரைப் பாத்து புருவங்களை உயர்த்தினான்.

"சக்திவேலைப் பார்க்கணும்" என்றான் சேகர்.

"என்ன விசயமாய்ப் பார்க்கணும்?"

"அவரோட ஃப்ரெண்ட்டப்பா நான்."

"நான் ரெண்டு வருஷமா இங்கேதானே இருக்கேன். உங்களை நான் ஒரு தடவை கூட பார்க்கலையே?"

"நான் அவரோட பழைய நண்பன் சேகர்னு சொல்லு. அவருக்குத் தெரியும்."

சக்திவேல் இருந்த அறைக்குள் போன அந்த இளைஞன் சொற்ப நேரத்தில் திரும்பி வந்தான்.

"அவருக்கு உங்களை ஞாபகம் இல்லையாம். இருந்தாலும் வரச் சொன்னார்" என்று அந்தப் பையன் சொல்ல, குழப்பத்துடன் சேகர் அந்த அறைக்குள் பிரவேசித்தான்.

"என்ன சக்திவேல், சுகமா இருக்கியா?" என்று முகமெல்லாம் மலரக் கேட்டான் சேகர்.

"உங்களை எனக்கு நினைவில்லையே" என்று சொற்கள் தடுமாற்றத்துடன் சக்திவேலிடமிருந்து வெளிவந்தன.

மூன்றாண்டுகள் ஒன்றாகப் படித்தது நினைவில்லை என்கிறானே! பதினைந்து வருடங்களில் மறந்து போகிறவிஷயமா இது? எனக்கு நினைவிருக்கிறது. இவனுக்கு ஏன் இல்லாமல் போயிற்று?

'ஏதாவது முக்கியமான சம்பவத்தைச் சொல்லி நினைவுக்குக் கொண்டுவர முயற்சித்தால் என்ன?' என்று சேகர் ஒரு கணம் யோசித்தான். சட்டென்று அந்த எண்ணத்தைக் கைவிட்டான். முகமே மறந்து போனவனுக்கு சம்பவங்களா நினைவிருக்கப் போகிறது?

சேகரின் மன ஓட்டத்தைத் துல்லியமாக அறிந்து விட்டவன்போல் சக்திவேல் பேச ஆரம்பித்தான்.

"தினமும் இப்படி எத்தனையோ பேர் வர்றாங்க... சிலரை எனக்கு ஞாபகம் இருக்கு... சிலரை எனக்கு ஞாபகம் இருக்கறதில்லே."

புறப்படலாம் என்று எழுந்த சேகரை "இருந்து காபியாவது சாப்பிட்டுட்டுப் போங்க" என்று சொல்ல, சேகருக்கு மட்டும் காபி வந்தது.

பாதி காபியை தம்ளரிலிருந்து கப்பில் ஊற்றி, "நாம் காலேஜில் படிக்கும்போது எத்தனை தடவை ஒன் பை டூன்னு ஒரு டீ ஆர்டர் செய்து டீக்கடையில் சாப்பிட்டிருக்கோம்? அதேமாதிரி இன்னைக்கும் ஒன் பை டூ" என்று கூறி சேகர் பாதி காபியை சக்திவேலுக்குத் தந்தான்.

சக்திவேலால் அதை வாங்காமல் இருக்க முடியவில்லை.

காபியைச் சாப்பிட்டு முடித்ததும், "நான்

வர்றேன்..." என்று மட்டும் சொல்லிவிட்டு சக்திவேலிடமிருந்து விடை பெற்றுக் கொண்டான் சேகர்.

இரவு சக்திவேலைச் சாப்பிட அழைத்தாள் அவன் மனைவி கலா.

"பசிக்கலே" என்று ஒரே சொல்லில் பதில் வந்தது அவனிடமிருந்து.

"ஏன் பசிக்கலே? நானும் காலையிலிருந்து பார்த்துட்டுத்தானே இருக்கேன். உடம்புக்கு ஏதாவது?"

"இன்னைக்கு என்னோட பிரண்ட் சேகர் வந்திருந்தான்."

"கல்யாணம் ஆன புதுசுலே விலாசம் தெரியாததாலே கல்யாணத்துக்குக் கூட அழைக்க முடியாமல் போச்சுன்னு சொன்னீங்களே! அந்த சேகரா?"

"அதே சேகர் தான்."

"அவர் வந்தபோது என்கிட்ட ஏங்க சொல்லலே?" மனைவி வினவியதில் உரிமை இருந்தது.

"அடையாளமே தெரியாத மாதிரி அவன்கிட்ட நடந்துட்டேன்."

"அடையாளம் தெரியாத மாதிரியா?"

"ஆமா... அப்படியேதான்" என்று அழுத்தமாகச் சொன்னான் சக்திவேல்.

"ஏங்க அப்படி நடந்துட்டீங்க?"

"தேர்தல் பிரச்சார சமயத்திலே வெற்றியே பெறாட்டியும், எப்படியும் கணிசமான வோட்டாவது வாங்கணும் என்கறதுக்காக என்னோட மனசாட்சிக்கு விரோதமான சில காரியங்களைக் கூட செய்ய வேண்டியிருந் தது. நிறையப் பத்திரிகைகள் அதை விலா வாரியா எழுதியிருந்தாங்க."

"அதுக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம்?"

"சம்பந்தம் இருக்கு கலா. இது சம்பந்தமா தேர்தல் கமிஷன் என்னை என்கொய்ரி செய்தாக் கூட எதையாவது சொல்லி என்னாலே சமாளிச்சிர முடியும். ஆனால் சேகர் அதைப் பத்திக் கேட்டா அவன்கிட்ட என்னாலே சமாளிக்க முடியும்கிற நம்பிக்கை எனக்கில்லே. சேகர் பேரைக் கேட்டதும் திடீரென்று ஒரு பயம் வந்து என் மனசைக் கவ்விடுத்து. அதுதான் அப்படிக் கோழைத்தனமா நடந்துக்கிட்டேன். ஆனால் அவன் இந்த வீட்டைவிட்டுப் போனதிலிருந்து என்னோட மனசாட்சி, ஏன் இப்படி நடந்துட்டோம், ஏன் இப்படி நடந்துட்டோமின்னு உலுக்கோ உலுக்குன்னு உலுக்கிட்டிருக்கு" என்று சொன்ன சக்திவேலின் விழிகளில் லேசாகக் கண்ணீர் கசிந்து கொண்டிருந்தது.

கே. பாலசந்தர்

14

# நினைவலைகள்

**THE DANGEROUS AGE FOR WOMEN IS FROM 3 TO 70.**
**— A PUBLICITY SLOGAN**

ஆங்கில இலக்கியத்திற்குள் கலந்து விட்ட ஒரு விளம்பர வாக்கியம் இது.

'ADAMS RIB' என்கிற திரைப்படத்தின் விளம்பரத்திற்காக பிரத்தியேகமாக அமைக்கப்பட்ட ஒரு வாக்கியம். 1922ல்...

1922லிருந்து 1994 வரை 72 வருடங்களாக நிலைமை மாறியிருக்கிறதா என்று நினைத்துப் பார்க்கலாம்.

திரைப்படத்திற்காக ஒரு காட்சி எடுக்கிறோம் :

ஒரு சின்ன வேப்பங்கன்றை கொல்லையில் நடுவதற்கு ஒரு குழி வெட்டப்படுகிறது. குழி வெட்டப்படும் 'ஷாட்' எடுத்தாகி விட்டது. ஆனால் மழை வந்து விடுகிறது. படப்பிடிப்பு நின்று போய் விடுகிறது. அதே காட்சி அடுத்த 'ஷெட்யூல்' நடக்கும் போது, 25 நாட்களுக்குப் பிறகு எடுக்கப்படுகிறது. தோண்டப்பட்ட அதே குழியை மீண்டும் சரிசெய்து வேப்பங்கன்றை அதில் வைத்து மண்ணைப் போட்டு குழியை மூடுவது இப்பொழுது எடுக்கப்படுகிறது. அடுத்த 'ஷாட்' எடுப்பதற்குள் ஜெனரேட்டர் ரிப்பேராகி விட, படப்பிடிப்பு தடைபடுகிறது. அதற்கடுத்த வாரம்தான் அதனுடைய தொடர்ச்சியான 'ஷாட்'டுகளை எடுக்க வேண்டியிருக்கிறது.

வேப்பங்கன்றை நட்ட கதாநாயகன் அந்தக் கன்றைப் பார்த்து பெருமிதம் கொள்கின்ற அந்த 'ஷாட்' இப்பொழுது எடுக்கப் படுகிறது.

கன்றை நட்டு விட்டு வீட்டினுள்ளே வந்த கதாநாயகனும் கதாநாயகியும் அதைப் பற்றிப் பேசிக் கொள்ளும் காட்சி கொல்லைப்புறத்தில் எடுத்த ஷாட்டுகளுக்கெல்லாம் முன்னாலேயே வேறு எங்கோ ஒரு வீட்டில் எடுக்கப் பட்டு விட்டது.

காட்சி எடுத்து முடிக்கப்பட்டு விட்டதாக நினைத்துக் கொண்டிருக்கும் இயக்குநர், வேப்பங்கன்றை நட்டவரின் ஒரு குளோசப் இருந்தால் இன்னும் நன்றாக இருக்குமோ என்று மூவியோலாவில் எடிட் பண்ணும் போது ஒரு முடிவெடுத்து அதற்காக கதாநாயகனின் ஒரு 'குளோசப்'பை Patch work ஆக எடுத்து ஏற்கெனவே எடுக்கப்பட்ட காட்சியில் சேர்த்துக் கொள்கிறார்.

ஏறத்தாழ மூன்று மாத காலத்திற்குள் எங்கெங்கோ எப்பொழுதெல்லாமோ எடுத்த 'ஷாட்'டுகள் தொடர்ச்சியாக்கப்பட்டு வெட்டி ஒட்டித் திரையில் ஓட்டிப் பார்க்கும் போது காட்சிகளின் முழுமை பளிச்சென்று நமக்குத் தெரிகிறது. இதுதான் சினிமா!

இதுவேதான் வாழ்க்கையும் கூட!

ஆம்! எப்பொழுதெல்லாமோ, எங்கெல்லாமோ நடந்த சின்னச் சின்ன வாழ்க்கைச் சம்பவ உண்மைகள் பற்றிய நினைவுகள் நெஞ்சத்தின் அடித்தளத்தில் Sub conscious ஆக ஒட்டிக் கொண்டவையாகி, பிற்பாடு ஒரு ஒட்டுமொத்தமான பாதிப்பை நம்மிடம் ஏற்படுத்துகிறது.

எனது எட்டு வயதிற்கு முன்பான நினைவுகளைத் தோண்டிப் பார்க்க நினைக்கிறேன். இயலவில்லை. எட்டு வயதிற்குப் பிற்பட்ட நினைவுகள் ஓரளவிற்கு அவ்வப்பொழுது அலைகளாக, out of focus ஆக, ஓடி வருவதை உண



• எம்.ஜி.ஆர். : "தாய் எனப்படுபவள்..."

❑ உங்கள் பிறந்த நாள், திருமண நாள் தவிர, இவையெல்லாம் கூட வருடத்தின் முக்கிய தினங்கள்தான்.

| | |
|---|---|
| ஜனவரி 12 | - தேசிய இளைஞர் தினம் |
| ஜனவரி 15 | - தரைப்படை தினம் |
| ஜனவரி 26 | - குடியரசு தினம், அகில உலக சுங்க தினம் |
| ஜனவரி 30 | - தியாகிகள் தினம் |
| பிப்ரவரி 28 | - தேசிய விஞ்ஞான தினம் |
| மார்ச் 8 | - அகில உலக மகளிர் தினம் |
| மார்ச் 15 , | - உலக ஊனமுற்றோர் தினம் |
| மார்ச் 21 | - வன தினம் |
| ஏப்ரல் - 7 | - உலக சுகாதார நாள் |
| ஏப்ரல் 18 | - உலக மரபு தினம் |
| ஏப்ரல் 22 | - பூமி தினம் |
| மே 1 | - உழைப்பாளர் தினம் |
| மே 3 | - பத்திரிகை சுதந்திர தினம் |
| மே - 2வது ஞாயிறு | - தாய்மார்கள் தினம் |
| மே 8 | - செஞ்சிலுவை தினம் |
| மே 15 | - உலக குடும்ப தினம் |
| மே 24 | - காமன்வெல்த் தினம் |
| மே 31 | - புகை ஒழிப்பு தினம் |
| ஜூன் 5 | - உலக சுற்றுச் சூழல் தினம் |
| ஜூலை 11 | - உலக மக்கள் தொகை தினம் |
| ஆகஸ்ட் 6 | - ஹிரோஷிமா தினம் |
| ஆகஸ்ட் 9 | - வெள்ளையனே வெளியேறு தினம், நாகசாகி தினம் |
| செப்டம்பர் 5 | - ஆசிரியர் தினம் |
| செப்டம்பர் 8 | - உலக கல்வியறிவு தினம் |
| செப்டம்பர் 26 | - காது கேளாதோர் தினம் |
| செப்டம்பர் 27 | - உலக சுற்றுலா தினம் |
| அக்டோபர் 4 | - பிராணிகள் நலதினம் |
| அக்டோபர் 8 | - விமானப் படை தினம், முதியோர் தினம் |
| அக்டோபர் 10 | - தேசிய தபால் தினம் |
| அக்டோபர் 13 | - அணு ஆயுத ஒழிப்புக்கான ஐ. நா. சபை தினம் |
| அக்டோபர் 14 | - உலக தரக் கட்டுப்பாடு தினம் |
| அக்டோபர் 15 | - வெள்ளை ஊன்றுகோல் (பார்வையற்றோர்) தினம் |
| அக்டோபர் 16 | - உலக உணவு தினம் |
| அக்டோபர் 24 | - ஐ. நா. தினம் |
| நவம்பர் 14 | - குழந்தைகள் தினம் |
| டிசம்பர் 1 | - உலக எய்ட்ஸ் தினம் |
| டிசம்பர் 4 | - கடற்படை தினம் |
| டிசம்பர் 7 | - கொடி தினம் |
| டிசம்பர் 10 | - மனித உரிமை தினம் |
| டிசம்பர் 24 | - உழவர் தினம் |

— எஸ்.வி.

நன்றி : மனோரமா இயர் புக்

கிறேன்.

காவிரி நதி, குடமுருட்டி வழியாக, முடிகொண்டான் ஆற்று வழி, நான் பிறந்து வளர்ந்த எனது நல்லமாங்குடி கிராமத்தில் எங்களது தெருவின் மிக அருகாமையில் சலசலத்துப் போய்க் கொண்டிருக்கும் அந்த இன்பச் சூழலில் எனது பள்ளிப் பிராயங்கள். ஆறு மாதங்கள் கரை புரண்டோடும் முடிகொண்டான் ஆற்று நீரும், ஆறு மாதங்கள் வற்றி விட்ட நிலையில் அதன் மணற்பாங்கான மேற்பரப்பும்தான் பள்ளிப் பிராயங்களில் படிப்பையும் அறிவையும் தெம்மாங்கையும் தென்றலையும் எதிர்கால கற்பனைகளையும் வாழ்க்கை விசித்திரங்களையும் அவ்வப்பொழுது மணற்பரப்பில் மேடை போட்டு நடக்கும் புரியாத அரசியல் மேடைப் பிரசங்கங்களையும் எனக்கு இனம் காட்டியவை.

எனக்கு ஒன்பது வயதிருக்கலாம். ஆரம்பப் பாடசாலையிலிருந்து உயர்நிலைப் பள்ளியை நான் எட்டியிருந்த நேரம்.

பிள்ளை பெறுவதற்காக எனது தமக்கையார் டெல்லியிலிருந்து கிராமத்திற்கு வந்திருந்தார். பிள்ளை பெறுவதற்கான மருத்துவமனைகளும், வாரத்திற்கொரு 'செக்கப்'பும், 'ஸ்கானிங்'களும் அன்று - அதிலும் கிராமப் புறங்களில் ஏது? ஏதோ பெயருக்கென்று ஒரு அரசாங்க ஆஸ்பத்திரி நன்னிலம் டவுனில் இருக்கும். கிராமத்திற்கென்று ஒரு மருத்துவச்சி இருப்பார்; ஒரு முறை வயிற்றைத் தடவிப் பார்த்து விட்டு ஜனனம் ஆகப் போகும் நாளைச் சரியாகக் குறிப்பிட்டுவிட்டு "வலி எடுத்தவுடன் சொல்லி அனுப்புங்கள்" என்று சொல்லிப் போவார்.

அந்த நாள் வந்தது.

பிரசவ வலியினால் துடித்தார் எனது தமக்கையார். வீட்டுக்குள்ளேயே ஒரு தனி அறைக்கு அழைத்துச் சென்றார்கள். பிரசவ வலியினால் ஏற்படும் ஓலத்தை முதன் முறையாக என் நினைவு தெரிந்து அறைக்கு வெளியே நின்றபடி பெரும் பீதிகலந்த ஒரு அதிர்ச்சியுடன் கேட்டுக் கொண்டே நின்றிருந்தேன்.

எனது தமக்கையார் எழுப்பிய அந்தக் கதறலை பொறுத்துக் கொள்ளக்கூடிய சக்தி

எனக்கில்லை. எனக்கும் அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது. அங்கிருந்து ஓடினேன். கொல்லைப்புறத்தில் உள்ள கிணற்றடியில் ஒரு ஓரத்தில் சுவரில் முகத்தைப் புதைத்துக் கொண்டு விக்கி, விக்கி அழுது தீர்த்துக் கொண்டிருந்தேன். பிறந்த குழந்தையின் அழுகுரல் சப்தம் கேட்டது. அப்பொழுதும் நான் அழுவதை நிறுத்தவில்லை. எதையோ எடுத்துச் செல்ல அவசரமாக கிணற்றடிப் பக்கம் வந்த எனது தாயார் என்னைப் பார்த்து விட்டு "ஏன் இங்கே நிக்கிறே! சேதுவுக்குப் பிள்ளைக் குழந்தை பிறந்திருக்கிறது; வந்து பாரு" என்று மகிழ்ச்சியுடன் கூறி விட்டுச் சென்று விட்டார்.

இந்தப் பெருமகிழ்ச்சி எதற்காக?

நல்லபடியாகக் குழந்தை பிறந்து விட்டது என்பதற்காகவா? அது ஆண் குழந்தையாகப் பிறந்திருக்கிறது என்பதற்காகவா? எனக்குப் புரியவில்லை.

அன்று பிறந்த அந்த ஆண் குழந்தைதான் இன்று மத்திய சர்க்காரில் ஒரு சீனியர் I.A. & A.S. அதிகாரியாகப் பணிபுரிந்து கொண்டிருக்கிறான்.

வாழ்க்கையில் எல்லோர் வீட்டிலும் நடக்கும் ஒரு சாதாரண சம்பவம்தான்; ஆனால் ஒன்பது வயதில் இந்தச் சம்பவம் என் இதயத்தினுள் ஒரு பெரும் வடுவாக ஆகி விட்டிருந்தது.

One personal anecdote of a man is worth volumes of his biography.

எங்களையெல்லாம் வளர்த்து ஆளாக்குவதற்கு எங்கள் தாய் பட்ட கஷ்டங்கள்... இன்னும் எங்கள் குடும்பத்தில் நடந்து போன சில சோகமயமான நிகழ்ச்சிகள்... எனக்கு நினைவு தெரிவதற்கு முன்பே பால்ய விவாகமாகி.. தனது கணவனைத் தனது பன்னிரண்டாவது வயதிலே இழந்து விட்டு அன்றிலிருந்து விதவையாகவே இருந்து கொண்டு இப்பொழுது 70 வயதுகளைத் தாண்டியிருக்கும் இன்னொரு மூத்த சகோதரி!

திருமணமாகி இரண்டு பெண் குழந்தைகளுக்குத் தாயாகி பம்பாயில் மகிழ்ச்சியுடன் குடித்தனம் செய்து கொண்டிருந்த எனது இளைய சகோதரி திடீரென்று தனது 23வது வயதிலே கணவனைப் பறிகொடுத்து விட்டு சென்னைக்குத் திரும்பி வந்தது...

இவையனைத்தும் ஒரு தனிப்பட்ட மனிதனின் மத்திய தரக் குடும்பத்தில் நடந்த துயரமான சம்பவங்கள் என்றாலும் அவ்வப்பொழுது இந்தச் சம்பவங்கள் என் இதயத்தின் அடித்தளத்தில் ஏற்படுத்திய காயங்களையும் ரணங்களையும் காலத்தினால் குணப்படுத்தவே முடியவில்லை; இந்தச் சம்பவங்களை யெல்லாம் சொல்லிச் சொல்லி எனது தாய் அழும் போதெல்லாம் என் தாயை நினைத்து நானும் அழுதிருக்கிறேன்.

அப்படிப்பட்ட சின்ன வயது தாக்கங்களும் பாதிப்புகளும்தான், தாய் பற்றியும், தாய்மையின் மகத்துவம் பற்றியும், பெண்களின் துர்பாக்கிய நிலைகள் பற்றியும் எனது நாடகங்களிலும் பின்னால் வந்த திரைப்படங்களிலும் பெருமளவில் பிரதிபலிக்கத் தொடங்கியது என்று தோன்றுகிறது.

சர்வர் சுந்தரம் - அவனது தாய் இருவருக்கு



**அடிக்கடி செய்திகளில் அடிபடுபவர் ராம்விலாஸ் பாஸ்வான். இங்கே அவர் பற்றிச் சில குறிப்ஸ்.**

●● 1977ல் நடந்த பாராளுமன்றத் தேர்தலில், தம்மை எதிர்த்துப் போட்டியிட்ட இ. காங்., வேட்பாளரை விட 4 லட்சத்து 24 ஆயிரத்து 545 வாக்குகள் அதிகம் பெற்றவர் பாஸ்வான். 1989ல் நடந்த தேர்தலில் இந்த வித்தியாசத்தை 5 லட்சமாக்கி கின்னஸ் சாதனை புரிந்தார்.

●● பீகார் மாநிலத்தின் சாகர்பானி பாஸ்வானின் சொந்த ஊர். சிறு வயதில், ஒரு ஹரிஜன முதியவர், ஒரு மேல்ஜாதி ஈட்டிக்காரனால் தாக்கப்பட்ட நிகழ்ச்சி பாஸ்வானை மிக பாதித்து, அவரைச் சமூகப் பணியில் ஈடுபடுத்தியது..

●● 1969ல் அலுாலி ரிஸர்வ் தொகுதியில் போட்டியிட்டு வென்ற போது பாஸ்வானுக்கு வயது ஜஸ்ட் - 25!

●● நக்ஸலைட் தொடர்பு, மிசா என்று சில தரம் சிறை சென்றதுண்டு. தலைமறைவான காலத்தில் பத்திரிகை நடத்தியதற்காகவும் கைதாகியிருக்கிறார்.

●● சரண்சிங்கின் லோக் தளத்தில் இருந்தவர்; ஜனதா தளத்துக்கு வந்தார். தேசிய முன்னணியின் செகரெட்டரி ஜெனரல். வி.பி. சிங் அமைச்சரவையில் தொழிலாளர் நலத்துறை அமைச்சரானார்.

●● ஜனதா தளம் சிறிது சிறிதாய் சிதறிக் கொண்டிருக்கும் இந்த வேளையில், திட்டமிட்டபடி கட்சியின் பொறுப்புகளில் அறுபது சதவீதம் தாழ்த்தப்பட்டவர்களுக்குத் தரப்படவில்லை என்று கூறி இந்த முறை ராஜினாமா!

●● இவர் கூக்குரலிட்டுக் கொண்டிருந்த 'சமூக நீதி' கொள்கை இப்போது முலயம் சிங், கன்ஷிராம், சீதாராம் கேசரி போன்றவர்களால் 'ஹைஜாக்' செய்யப்பட்டு விட்டது.

தொகுப்பு : மௌஷ்மி



# ஸ்ரீராம் நிறுவனங்கள் நடத்தும்
## மகாகவி பாரதியார்
## 113ஆவது பிறந்த நாள் விழா
## திருக்குறள் விழா




# மாணவர்களுக்குப் பேச்சுப் போட்டி

**மொத்தப் பரிசு ரூ.20,000/-**

**முதல் சுற்றுப் போட்டி திருச்சி, மதுரை, கோவை, சென்னை மற்றும் காரைக்குடி நகரங்களில் நடைபெறும். நிறைவுப் போட்டி சென்னையில்.**

* (மாணவர்கள் என்று கூறும்போது மாணாக்கியர்களும் சேர்வர்)

ஆண்டுதோறும் நடத்துவது போல் இந்த ஆண்டும் மாணவ/மாணாக்கியர்களுக்கு மகாகவி பாரதியார் இலக்கியத்திலும், திருக்குறளிலும், ஈடுபாட்டையும் பேச்சுத்திறனையும் மேலும் வளர்க்க, நடுநிலைப்பள்ளி, மேல்நிலைப்பள்ளி, கல்லூரி, மாணவர்களுக்குப் பேச்சுப்போட்டி நடத்த முடிவு செய்துள்ளோம். இந்தப் போட்டி திருச்சி, மதுரை, கோயம்புத்தூர், சென்னை, காரைக்குடி நகரங்களில் நடைபெறும். ஒவ்வொரு நகரத்திலிருந்தும் நிறைவுப் போட்டிக்குத் தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் சென்னைக்கு வந்து செல்லப் பயணச் செலவு, தங்குமிடம், உணவுச் செலவுக்காக ரூ. 250- அளிக்கப்படும். (சென்னை நீங்கலாக) பேசுபவர்கள் 5 மணித்துளிக்குள் பேசவேண்டும். நடுவர்கள் தீர்ப்பே முடிவானது.

## பேச்சுப்போட்டி நடைபெறும் இடங்கள்

கோவை : 27.11.94 காலை 9 மணி
இடம் : மணி மேநிலைப்பள்ளி
G.K.N.M. ஆஸ்பத்திரி எதிரில்,
பாப்பநாயக்கன் பாளையம்,
கோவை 641037

திருச்சி : 26.11.94 காலை 9 மணி
இடம் : E.R. மேநிலைப்பள்ளி
சிந்தாமணி (அண்ணா சிலை அருகில்),
திருச்சி - 620 002.

மதுரை : 26.11.94 காலை 9 மணி
இடம் : தூய பிரிட்டோ ஹையர் செகண்டரி பள்ளி,
ஞான ஒளிவுபுரம், அரசடி,
மதுரை-625 010.

காரைக்குடி : 27.11.94
இடம் : S.M.S. ஆண்கள் மேல்நிலைப்பள்ளி
சிவன் கோயில் அருகில்,
காரைக்குடி.

சென்னை : 27.11.94 காலை 9 மணி
இடம் : பாரத் சீனியர் செகண்டரி பள்ளி
121, காமராஜ் அவென்யூ,
(அடையாறு தொலைபேசி நிலையம் எதிரில்), அடையாறு,
சென்னை-600 020.



''எங்க வீட்டுக்கு யாராவது பெண் பார்க்க வந்தா நான் உடனே ரேஷன் கடைக்குப் போய் சர்க்கரை வாங்கிட்டு வந்துடு வேன்!''

''ஏன் அப்படி?''

''அதிலேயே ரவை கலந்திருக்கிறதால் அப்படியே கேசரி கிண்டிடலாம். வேலை மிச்சம் பாருங்க!''

- வேதபுரி எஸ். ரமேஷ்

---

மிடையே காணப்பட்ட ஒரு பாசப் பிணைப்பும் இதன் தாக்கத்தினால் எழுந்த ஒரு எதி ரொலியாகத்தானிருக்க வேண்டும்.

Probably it is the opening of a door in my later years for my sub conscious psychosis.

இந்தத் தாய்மை நேசமும் அப்படிப் பட்ட புனிதத் தாய் மீது ஒரு மகனுக்கு ஏற்பட்ட வெறித்தனமான தாய் பக்தியும் தான் நான் அடுத்து எழுதிய 'மெழுகுவர்த்தி' நாடகத்தின் அடித்தளமாக அமைந்திருந்தன. இந்த நாடகம் மனோதத்துவ ரீதியில் எழுதப் பட்டது.

இதுதான் கதை :

தாயை தெய்வமாக வரித்த ஒரு இளை ஞன். வளர்ந்து ஆளான பிறகும் ஒரு Mother's child ஆக இருக்கும் அந்தக் கதாநாயகன் அலுவலக விஷயமாக தொலைதூரம் வெளி யூர் சென்றிருக்கும் ஒரு வேளையில் அந்தத் தாய் திடீரென்று இறந்து விடுகிறாள். அவன் வெளியூரிலிருந்து திரும்பி வரும் வரை தாயின் சடலத்தைக் கட்டிக் காப்பாற்ற முடி யாத ஒரு நிலை. சில பெரியவர்களின் வேண்டு கோளுக்கிணங்க தாயின் உடல் தகனம் செய் யப்படுகிறது. நாயகன் வீடு திரும்பிய பிறகு தான் அவனிடம் தாயின் மரணம் தெரிவிக் கப்படுகிறது. துடிக்கிறான்; கதறுகிறான்; தாயின் மரணத்தை அவனால் சிறிதும் ஒப்புக் கொள்ள முடியவில்லை. ''அவள் சாகக் கூடாது; சாக முடியாது; சாக விட மாட்டேன். அவள் உயிரோடுதான் இருக்க வேண்டும்'' என்கிற உள் மனத்தின் பிடி வாதம் அவனைப் பெருமளவில் ஆக்கிர மித்துக் கொள்கிறது. அந்த நேரத்தில் இவன் அறியாமலேயே இவனை உயிராக நேசித்துக் கொண்டிருக்கும் கதாநாயகி வீட்டிற்குள் நுழைய... இல்லாத தாயின் வடிவத்தை இந்த இளம்பெண்ணின் உருவத்தில் காண்கிறான். ''இதோ இருக்கிறார்களே என் தாய்'' என்று புலம்புகிறான். உள் மனத்தின் பிடிவாதம் ஓங்கி நிற்க, He fixes the illusion of his mother on this girl. அவனைக் காதலித்த அந்தக் கன் னியே இவனுக்குத் தாயாக நடிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது, மனோதத்துவ டாக்டரின் ஆலோசனையின் பேரில். தாயின் மறைவை ஒப்புக் கொள்ள மறுக்கும் அவ னது Sub conscious மனது, இவளைத் தாயா கவே ஏற்றுக் கொண்டு விட்டது.

இந்தக் கதையின் கரு மேடை நாடகமாக ஆக்கப்படுவதற்கு எனக்கு சவாலாக அமைந்தது ஒரு கேள்வி :

Will the audience accept this psycho phenomenon?

ஆம்! ஒப்புக் கொண்டார்கள்.

மேஜர் சுந்தரராஜன் கதாநாயகனாக வும் சௌகார் ஜானகி அவர்களை முதன் முதலாக மேடையில் கதாநாயகியாகவும் தோன்றச் செய்த இந்த நாடகம். நாடக மேடை யிலே ஒரு புயலைக் கிளப்பி விட்டது.

அதுவரை எந்த ஒரு நாடகத்திற்கும் விமர் சனம் எழுதிப் பழக்கப்படாத ஒரு வாரப் பத்திரிகை, நாடகத்தை ''ஓஹோ''வென்று பாராட்டி எழுதியிருந்தது. விமர்சனத்தின் கடைசி வரிகள் இதுதான் :

''மேலைநாடுகளில் டெலிவிஷனால் மேடை நாடகங்கள் பாதிக்கப்பட்டிருப்ப தாகச் சொல்லப்படுகிறது. டெலிவிஷன் தோற்றுப் போக நாலு பாலசந்தர்கள் தோன் றினால் போதுமே'' என்று குறிப்பிடப்பட் டிருந்தது.

நாடகத்தைப் பார்த்த மக்கள் திலகம் MGR அவர்களுக்கு நாடகம் மிகவும் பிடித் துப் போய் விட்டது. அதில் ஆச்சர்யம் இல்லை! ஏனெனில் MGR அவர்களின் தாய் பக்தி உலகம் அறிந்த ஒரு விஷயம். இந்த நாடகத்தைத் திரைப்படம் ஆக்க வேண்டு மென்றும், அதில் அவரே கதாநாயகனாக நடிக்க வேண்டுமென்றும் மிகவும் விரும்பி முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

ஆனால் ஏதோ காரணங்களினால் பின் னால் கைவிடப்பட்டது. மிகவும் மனோதத் துவரீதியாக இருக்கும் கதைக் கருவும் அத னைப் பாமர மக்கள் எப்படி ஏற்றுக் கொள் வார்களோ என்கிற அச்சம் காரணமாகவும் இந்தக் கதை கைவிடப்பட்டிருக்கலாம்.

ஆனால் நாடகத்தைப் பார்த்து மிகவும் பிரமித்துப் போன MGR அவர்களின் வார்த் தைகள் இன்னமும் எனது நெஞ்சில் பசுமை யாக இருக்கின்றன :

''தாய் எனப்படுபவள் உங்கள் சோகங் களையெல்லாம் உங்களுக்காகத் தாங்கிக் கொள்கிற ஒரு சுமைதாங்கி என்று பொதுவா கக் கூறுவார்கள். ஆனால் என்னைப் பொறுத்த வரை ஒரு தாய் வெறும் சுமைதாங்கி இல்லை; உங்களது அந்தச் சுமைகளையே இல்லாமல் செய்பவள்தான் தாய்.''

(தொடரும்)

# பார்த்திபன் கனவு

**முன் கதை :**

சோழ நாட்டு நதிக்கரையோரம் கதை தொடங்குகிறது. உறையூரைத் தலைநகராகக் கொண்டு சோழ நாட்டை ஆண்டுவரும் பார்த்திப ராஜா, காலம் காலமாகக் காஞ்சியை ஆண்ட பல்லவர்களுக்குக் கட்டிவந்த கப்பத்தை ஆறு ஆண்டுகளாக நிறுத்திவிட்டவே, சோழ நாட்டைப் போர் மேகம் சூழ்கிறது. தேசபக்தனான படகோட்டி பொன்னன், தானும் போரில் கலந்து கொள்ளப் போவதாகத் தன் மனைவி வள்ளியிடம் சொல்கிறான். அவள் பயம் கொள்கிறாள். ஆனால் மன்னர் பார்த்திபரோ, 'ஒருவேளை தான் போர்க்களத்திலிருந்து திரும்பி வராவிட்டால் இளவரசருக்கு நீச்சல் கற்றுத்தர நீதான் சரியான ஆள்' என்று பொன்னனின் போர் ஆசைக்கு அணைப் போடுகிறார்.

பல்லவ தூதுவர்கள் சோழ எல்லைக்கு வருவதைப் பொன்னன் பார்க்கிறான். உடனே உறையூர் போக முடிவெடுக்கிறான்.

## 3. பல்லவ தூதர்கள்

பொன்னனும் வள்ளியும் தங்கள் குடிசையின் கதவைப் பூட்டிக் கொண்டு உறையூரை நோக்கிக் கிளம்பினார்கள். அவர்கள் வசித்த தோணித் துறையிலிருந்து உறையூர் மேற்கே ஒரு காத தூரத்தில் இருந்தது. அந்தக் காலத்தில் - அதாவது, சுமார் ஆயிரத்தி முந்நூறு வருஷங்களுக்கு முன்பு - செந்தமிழ் நாட்டில் ரயில் பாதைகளும் ரயில் வண்டிகளும் இல்லை; மோட்டார் வண்டிகளும் தார் ரோடுகளும் இல்லை. (இவையெல்லாம் அந்த நாளில் உலகில் எந்த நாட்டிலுமே கிடையாது.) அரசர்களும் பிரபுக்களும் குதிரைகள் மீதும் யானைகள் மீதும் ஆரோகணித்துச் சென்றனர். குதிரை பூட்டிய ரதங்களிலும் சென்றனர். மற்ற சாதாரண மக்கள் மாட்டு வண்டிகளில் பிரயாணம் செய்தார்கள். இந்த வாகனங்களெல்லாம் போவதற்காக விஸ்தாரமான சாலைகள் அமைக்கப்பட்டிருந்தன. குளிர்ந்த நிழல் தரும் மரங்கள் இருபுறமும் அடர்ந்து வளர்ந்த அழகான சாலைகளுக்குச் சோழவள நாடு அந்தக் காலத்திலே பெயர் போனதாயிருந்தது. அந்தச் சாலைகளுக்குள்ளே காவேரி நதியின் தென்கரையோரமாகச் சென்ற ராஜபாட்டை மிகப் பிரசித்தி பெற்றிருந்தது.

இந்த ராஜபாட்டை வழியாகத்தான் பொன்னனும் வள்ளியும் சோழ நாட்டின் தலைநகரமான உறையூருக்குப் புறப்பட்டுச் சென்றார்கள்.

சோழநாடு அந்த நாளில் தன்னுடைய புராதனப் பெருமையை இழந்து ஒரு சிற்றரசாகத்தான் இருந்தது. தெற்கே பாண்டியர்களும் வடக்கே புதிதாகப் பெருமையடைந்திருந்த பல்லவர்களும் சோழ நாட்டை நெருக்கி அதன் பெருமையைக் குன்றச் செய்திருந்தார்கள். ஆனால், சோழ நாட்டின் வளத்தையும் வண்மையையும் அவர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை. அந்த வளத்துக்குக் காரணமாயிருந்த காவேரி நதியையும் அவர்களால் கொள்ளை கொண்டு போக முடியவில்லை. உறையூர் ராஜபாட்டையின் இருபுறமும் பார்த்தால் சோழ நாட்டு நீர்

வனத்தின் பெருமையை ஒருவாறு அறிந்து கொள்ளும்படியிருந்தது. ஒருபுறத்தில் கரையை முட்டி அலைமோதிக் கொண்டு கம்பீரமாய்ச் சென்ற காவேரியின் பிரவாகம்; ஆற்றுக்கு அக்கரையில் நீல வானத்தைத் தொட்டுக் கொண்டிருந்த அடர்த்தியான தென்னை மரத் தோப்புகளின் காட்சி; இந்தப் புறம் பார்த்தாலோ கண்ணுக்கெட்டிய தூரம் பசுமை, பசுமை, பசுமைதான். கழனிகளெல்லாம் பெரும்பாலும் நடவு ஆகியிருந்தன. இளம் நெற்பயிர்கள் மரகதப் பச்சை நிறம் மாறிக் கரும் பசுமை அடைந்து கொண்டிருந்த காலம். 'குளு குளு' சப்தத்துடன் ஜலம் பாய்ந்து கொண்டிருந்த மடைகளில் ஒற்றைக் காலால் தவம் செய்து கொண்டிருந்த வெள்ளை நாரைகள் இளம் பயிர்களின் பசுமை நிறத்தை இன்னும் நன்றாய் எடுத்துக் காட்டின. நெல் வயல்களுக்கு மத்தியில் ஆங்காங்கே சில வாழைத் தோட்டங்களும், தென்னந் தோப்புகளும் கரும்புக் கொல்லைகளும் காணப்பட்டன.

இத்தகைய வளங் கொழிக்கும் அழகிய நாட்டின் அமைதியைக் குலைப்பதற்கு யுத்தம் நெருங்கி வந்து கொண்டிருந்தது. இதனால் சோழ நாட்டுக் குடிகளின் உள்ளம் எவ்வளவு தூரம் பரபரப்பு அடைந்திருந்த தென்பதைப் பொன்னனும் வள்ளியும் உறையூர்ப் பிரயாணத்தின் போது நன்கு கண்டார்கள். பக்கத்துக் கழனிகளில் வேலை செய்து கொண்டிருந்த உழவர்களும் பயிர்களுக்குக் களை பிடுங்கிக் கொண்டிருந்த ஸ்திரீகளும், பொன்னனையும் வள்ளியையும் கண்டதும் கைவேலையைப் போட்டு விட்டு ஓடோடி வந்தார்கள்.

"பொன்னா! என்ன சேதி?" என்று சிலர் ஆவலுடன் கேட்டார்கள். "சண்டை நிச்சயந்தானா?" என்று சிலர் விசாரித்தார்கள். "தூதர்கள் வந்த சமாசாரம் ஏதாவது தெரியுமா?" என்று வினவினார்கள். பொன்னன் ஒவ்வொருவரிடமும் ஒவ்வொரு விதமாய்ப் பதில் சொன்னான். "சண்டையைப் பற்றிச் சந்தேகம் என்ன, நமது மகாராஜா ஒரு நாளும் கப்பம் கட்டப் போவதில்லை. எல்லாரும் அவரவர்கள் வாளையும் வேலையும் தீட்டிக் கொண்டு வந்து சேருங்கள்!" என்று சிலரிடம் சொன்னான். வேறு சிலரிடம், "எனக்கு என்ன தெரியும்? உங்களுக்குத் தெரிந்தது தான் எனக்கும் தெரியும்" என்றான். அவர்கள், "நன்றாயிருக்கிறது, பொன்னா! உனக்குத் தெரியாமலிருக்குமா? சோழ நாட்டுக்கே



இப்போது முக்கிய மந்திரி நீதானே? உனக்குத் தெரியாத ராஜ ரகசியம் ஏது?" என்றார்கள். அப்போது வள்ளி அடைந்த பெருமையைச் சொல்லி முடியாது.

ஆனால் வேறு சிலர், "பொன்னா! மகாராஜா யுத்தத்துக்குப் போனால் நீயும் போவாயோ, இல்லையோ?" என்று கேட்டபோது வள்ளிக்கு ரொம்ப எரிச்சலாயிருந்தது. அவர்களுக்கு, "அது என் இஷ்டமா? மகாராஜாவின் இஷ்டம்!" என்றான் பொன்னன். அவர்கள் போன பிறகு, வள்ளியிடம், "பார்த்தாயா, வள்ளி! நான் யுத்தத்துக்குப் போகாமலிருந்தால் நன்றாயிருக்குமா? நாலு பேர் சிரிக்க மாட்டார்களா?" என்றான். அதற்கு வள்ளி, "உன்னை யார் போக வேண்டாமென்று சொன்னார்கள்? மகாராஜா உத்தரவு கொடுத்தால் போ, என்னையும் அழைத்துக் கொண்டு போ என்று தானே சொல்லுகிறேன்" என்றாள்.

இப்படி வழியெல்லாம் பொன்னன் நின்று நின்று, கேட்டவர்களுக்கு மறுமொழி சொல்லிக் கொண்டு போக வேண்டியதாயிருந்தது. உறையூர்க் கோட்டை வாசலை அணுகிய போது, அஸ்தமிக்கும் நேரம் ஆகிவிட்டது. அவர்கள் வந்து சேர்ந்த அதே சமயத்தில் கோட்டை வாசல் திறந்தது. உள்ளிருந்து சில குதிரை வீரர்கள் வெளியே வந்து கொண்டிருந்தார்கள். முதலில் வந்த வீரன் கையில் சிங்கக் கொடியைப் பார்த்ததும், அவர்கள்தாம் மத்தியானம் உறையூருக்குச் சென்ற பல்லவ தூதர்கள் என்பது பொன்னனுக்குத் தெரிந்து விட்டது. இருவரும் சிறிது ஒதுங்கி நின்றார்கள். கோட்டை வாசல் தாண்டியதும் குதிரைகள் காற்றிலும் கடிய வேகத்துடன் பறக்கத் தொடங்கின. அவற்றின் காற்குளம்பின் புழுதி மறையும் வரையில் அவை சென்ற திசையையே பார்த்துக் கொண்டிருந்து விட்டு, பொன்னனும் வள்ளியும் கோட்டை வாசல் வழியாகப் புகுந்து சென்று நகருக்குள் பிரவேசித்தார்கள்.

நகரின் வீதிகளில் ஆங்காங்கே கும்பல் கும்பலாக ஜனங்கள் நின்று பேசிக் கொண்டிருந்தார்கள். ஒரு கும்பலின் ஓரத்தில் பொன்னனும் வள்ளியும் போய் நின்றனர். பல்லவ தூதர்கள் வந்த போது ராஜ சபையில் நடந்த சம்பவங்களை ஒருவன் வர்ணித்துக் கொண்டிருந்தான் : "ஆகா! அந்தக் காட்சியை நான் என்னவென்று சொல்லப் போகிறேன்! மகாராஜா சிங்காதனத்தில் கம்பீரமாக உட்கார்ந்





**பீகார் முதல்வர் லல்லு பிரசாத் யாதவுக்கு மதிய உணவில் 3 கிலோ மீனும், மூன்று நண்டுகளும், இரண்டு நத்தைகளும் தவறாமல் இருக்க வேண்டும். இதற்காக அவருக்குச் சொந்தமான ஒரு குளத்தில் அவை விசேஷ கவனத்துடன் கொழு கொழுவென்று வளர்க்கப்படுகின்றன. வெளியூர் 'டூர்' செல்லும்போதும் மாவட்ட அதிகாரிகள் இவற்றைத் தயாராக வைத்திருக்காவிட்டால் அவருக்கு அசாத்தியக் கோபம் வந்துவிடுமாம்.**

**ஆதாரம் : "தி வீக்"**
**தகவல் : ஷண்முகசுந்தரம்**

---

திருந்தார். இளவரசரும், மந்திரி, சேனாதிபதி எல்லாரும் அவரவர்களின் இடத்தில் உட்கார்ந்திருந்தார்கள். எள் போட்டால் எள் விழுகிற சப்தம் கேட்கும்; அந்த மாதிரி நிசப்தம் சபையில் குடிகொண்டிருந்தது. 'தூதர்களை அழைத்து வாருங்கள்!' என்று மகாராஜா சொன்னார். அவருடைய குரலில் எவ்வளவு வேகம் ததும்பிற்று இன்றைக்கு? தூதர்கள் வந்தார்கள். அவர்களுடைய தலைவன் முன்னால் வந்து நின்று மகாராஜாவுக்கு வந்தனம் செலுத்தினான்.

"தூதரே! என்ன சேதி?" என்று கேட்டார்.

"அந்தக் குரலின் கம்பீரத்திலேயே தூதன் நடுங்கிப் போய் விட்டான். அவனுக்குப் பேசவே முடியவில்லை. தட்டுத் தடுமாறிக் கொண்டே 'திரிலோக சக்கரவர்த்தி காஞ்சி மண்டலாதிபதி சத்ரு சம்ஹாரி நரசிம்ம வர்ம பல்லவராயருடைய தூதர்கள் நாங்கள்...' என்று அவன் ஆரம்பிக்கும்போது நம்முடைய அரண்மனை விதூஷகன் குறுக்கிட்டான். 'தூதரே! நிறுத்தும்! எந்தத் திரிலோகத்துக்குச் சக்கரவர்த்தி! அதல ஸுதல பாதாளமா? இந்திரலோக, சந்திரலோக, யமலோகமா?' என்றான். சபையில் எல்லாரும் 'கொல்லென்று' சிரித்தார்கள். தூதன் பாடு திண்டாட்டமாய்ப் போய் விட்டது. அவனுடைய உடம்பு நடுங்கிற்று; நா குழறிற்று. மெதுவாகச் சமாளித்துக் கொண்டு 'தங்கள் பாட்டனார் காலம் முதல் ஆண்டுதோறும் கட்டி வந்த கப்பத்தைச் சென்ற ஆறு வருஷமாய் மகாராஜா கட்டவில்லையாம். அதற்கு முகாந்திரம் கேட்டு வரும்படி சக்கரவர்த்தியின் கட்டளை' என்றான். ஆகா! அப்போது நமது மகாராஜாவின் தோற்றத்தைப் பார்க்கவேணுமே? 'தூதரே! உங்கள் சக்கரவர்த்தி கேட்டிருக்கும் முகாந்திரத்தைப் போர் முனையிலே தெரிவிப்பதாகப் போய்ச் சொல்லும்' என்றார். எனக்கு அப்போது உடல் சிலிர்த்து விட்டது...."

இவ்விதம் வர்ணித்து வந்தவன் சற்றே நிறுத்தியதும், பல பேர் ஏக காலத்தில், "அப்புறம் என்ன நடந்தது?" என்று ஆவலுடன் கேட்டார்கள்.

"அந்தத் தூதன் சற்று நேரம் திகைத்து நின்றான். பிறகு, 'அப்படியானால் யுத்தத்துக்குச் சித்தமாகும்படி சக்கரவர்த்தி தெரிவிக்கச் சொன்னார்கள். இதற்குள்ளே பல்லவ சைன்யம் காஞ்சியிலிருந்து கிளம்பியிருக்கும். போர்க்களமும் யுத்த ஆரம்ப தினமும் நீங்களே குறிப்பிடலாமென்று தெரியப்படுத்தச் சொன்னார்கள் என்றான். அதற்கு நம் மகாராஜா, 'புரட்டாசிப் பௌர்ணமியில் வெண்ணாற்றங்கரையில் சந்திப்போம்' என்று விடையளித்தார். உடனே சபையோர் அனைவரும், 'வெற்றிவேல்! வீரவேல்!' என்று வீர கர்ஜனை புரிந்தார்கள்...."

இதைக் கேட்டதும் அந்தக் கும்பலில் இருந்தவர்களும் "வெற்றிவேல்! வீரவேல்!" என்று முழங்கினார்கள். பொன்னனும் உரத்த குரலில் அம்மாதிரி வீர முழக்கம் செய்து விட்டு வள்ளியை அழைத்துக் கொண்டு மேலே சென்றான்.

இதற்குள் இருட்டி விட்டது. வெண் மேகங்களால் திரையிடப்பட்ட சந்திரன் மங்கலாய்ப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. ஒவ்வொரு வீதி மூலையிலும் நாட்டியிருந்த கல்தூணின் மேல் பெரிய அகல் விளக்குகள் இருந்தன. அவை ஒவ்வொன்றாய்க் கொளுத்தப்பட்டதும் புகை விட்டுக் கொண்டு எரிய ஆரம்பித்தன.

திடீரென்று எங்கேயோ உயரமான இடத்திலிருந்து பேரிகை முழக்கம் கேட்கத் தொடங்கியது. 'தம்ம்ம்' 'தம்ம்ம்' என்ற அந்தக் கம்பீரமான சப்தம் வான வெளியில் எட்டுத் திக்கிலும் பரவி 'அதம்ம்ம்' 'அதம்ம்ம்' என்ற பிரதித் தொனியை உண்டாக்கிற்று. உறையூரின் மண்டபங்களும், மாடமாளிகைகளும், கோபுரங்களும், கோட்டை வாசல்களும் சேர்ந்து ஏககாலத்தில் 'அதம்ம்ம்' 'அதம்ம்ம்' என்று எதிரொலி செய்தன. சற்று நேரத்துக்கெல்லாம் அந்தச் சப்தம் 'யுத்தம்ம் யுத்தம்ம்' என்றே கேட்கத் தொடங்கியது.

இடி முழக்கம் போன்ற அந்தப் பேரிகை ஒலியைக் கேட்டதும் பொன்னனுடைய உடம்பில் மயிர்க் கூச்சம் உண்டாயிற்று. அவனுடைய ரத்தம் கொதித்தது. நரம்புகள் எல்லாம் புடைத்துக் கொண்டன. வள்ளியோ, நடுங்கிப் போனாள்.

"இது என்ன இது? இம்மாதிரி ஓசை இது வரையில் நான் கேட்டதேயில்லை!" என்றாள்.

"யுத்த பேரிகை முழங்குகிறது" என்றான் பொன்னன். அவனுடைய குரலைக் கேட்டுத்

திடுக்கிட்ட வள்ளி, "ஐயோ! உனக்கு என்ன?" என்று கேட்டாள்.

"ஒன்றுமில்லை, வள்ளி! எனக்கு ஒன்றுமில்லை" என்றான் பொன்னன். சற்றுப் பொறுத்து, "வள்ளி! யுத்தத்துக்கு நான் கட்டாயம் போக வேண்டும்!" என்றான்.

## 4. பாட்டனும் பேத்தியும்

உறையூர்க் கம்மாளத் தெருவில் ஒரு வீட்டு வாசலில் வந்து பொன்னனும் வள்ளியும் நின்றார்கள். கதவு சாத்தியிருந்தது. "தாத்தா!" என்று வள்ளி கூப்பிட்டாள். சற்று நேரத்துக்கெல்லாம் கதவு திறந்தது. திறந்தவன் ஒரு கிழவன். "வா, வள்ளி! வாருங்கள் மாப்பிள்ளை!" என்று அவன் வந்தவர்களை வரவேற்றான். பிறகு, வீட்டுக்குள்ளே நோக்கி, "கிழவி! இங்கே வா! யார் வந்திருக்கிறது பார்" என்றான்.

மூன்று பேரும் வீட்டுக்குள் போனார்கள். "யார் வந்திருக்கிறது?" என்று கேட்டுக் கொண்டே அங்கு வந்த கிழவி, வள்ளியையும் பொன்னனையும் பார்த்ததும் பல்லில்லாத வாயினால் புன்னகை புரிந்து தன் மகிழ்ச்சியைத் தெரிவித்தாள். வள்ளியைக் கட்டிக் கொண்டு, "சுகமாயிருக்கியா, கண்ணு! அவர் சுகமாயிருக்காரா" என்று கேட்டாள்.

பொன்னன், "தாத்தா! உங்கள் பேத்தியைக் கொண்டு வந்து ஒப்புவித்து விட்டேன். நான் கொஞ்சம் வெளியே போய் விட்டு வருகிறேன்" என்றான்.

"வந்ததும் வராததுமாய் எங்கே போகிறாய்?" என்று கிழவன் கேட்டான்.

"மகாராஜாவைப் பார்க்கப் போகிறேன்" என்றான் பொன்னன்.

"மகாராஜா இப்போது அரண்மனையில் இல்லை, மலைக்குப் போயிருக்கிறார். இங்கே வா காட்டுகிறேன்" என்று கிழவன் அவர்களை வீட்டு முற்றத்துக்கு அழைத்துப் போனான். முற்றத்திலிருந்து அவன் காட்டிய திக்கை எல்லோரும் பார்த்தார்கள். உச்சிப் பிள்ளையார் கோவில் தீபம் தெரிந்தது. அங்கிருந்து தீவர்த்திகளுடன் சிலர் இறங்கி வருவது தெரிந்தது. இறங்கி வந்த தீவர்த்திகள் வழியில் ஓரிடத்தில் சிறிது நின்றன.

"அங்கே நின்று என்ன பார்க்கிறார்கள்?" என்று வள்ளி கேட்டாள்.

"மகேந்திர சக்கரவர்த்தியின் சிலை அங்கே இருக்கிறது. மகாராஜா, இளவரசருக்கு அதைக் காட்டுகிறார் என்று தோன்றுகிறது" என்றான் கிழவன்.

"அவர்கள்தான் இறங்கி வருகிறார்களே, தாத்தா! நான் அரண்மனை வாசலுக்குப் போகிறேன். இன்று ராத்திரி மகாராஜாவை எப்படியும் நான் பார்த்து விட வேண்டும்" என்று சொல்லிக் கொண்டே பொன்னன் வெளிக் கிளம்பினான். கிழவன் அவனோடு வாசல் வரை வந்து, இரகசியம் பேசும் குரலில், "பொன்னா! ஒரு முக்கியமான சமாசாரம் மகாராஜாவிடம் தெரிவிக்க வேணும். மாரப்ப பூபதி விஷயத்தில் கொஞ்சம் ஜாக்கிரதையாயிருக்கச் சொல்லு. இதை அந்தரங்கமாக அவரிடம் சொல்ல வேணும்!" என்றான்.

"மாரப்ப பூபதியைப் பற்றி என்ன?" என்று பொன்னன் கேட்டான்.

"அதெல்லாம் அப்புறம் சொல்கிறேன். மகாராஜாவின் காதில் எப்படியாவது இந்தச் சேதியைப் போட்டு விடு" என்றான் கிழவன்.

கிழவி விருந்தாளிகளுக்குச் சமையல் செய்வதற்காக உள்ளே போனாள். பாட்டனும் பேத்தியும் முற்றத்தில் உட்கார்ந்தார்கள்.

திடீரென்று வள்ளி, "ஐயோ தாத்தா! இதெல்லாம் என்ன?" என்று கேட்டாள்.

முற்றத்தில் ஒரு பக்கத்தில் உலைக்களம் இருந்தது. அதன் அருகில் கத்திகளும் வாள்களும் வேல்களும் அடுக்கியிருந்தன. அவைகளைப் பார்த்து விட்டுத்தான் வள்ளி அவ்விதம் கூச்சல் போட்டாள்.

"என்னவா! வாளும், வேலும், சூலமுந்தான். நீ எங்கே பார்த்திருக்கப் போகிறாய்? முன்காலத்தில்..."

"இதெல்லாம் என்னத்திற்கு, தாத்தா?"

"என்னத்திற்காகவா? கோவிலில் வைத்து தூப தீபம் காட்டிக் கன்னத்தில் போட்டுக் கொள்வதற்காகத்தான்! கேள்வியைப் பார் கேள்வியை! தேங்காய்க் குலை சாய்ப்பது போல் எதிராளிகளின் தலைகளை வெட்டிச் சாய்ப்பதற்கு வாள், பகைவர்களின் வயிற்றைக் கிழித்துக் குடலை எடுத்து மாலையாய்ப் போட்டுக் கொள்வதற்கு வேல், தெரிந்ததா!"

"ஐயையோ! பயமாயிருக்கிறதே!" என்று

---

**தெரிஞ்சுக்குவோம் - 1**

- **ஒருவருக்குப் பயம் ஏற்படும் போது அவர் முகத்தில் தோலுக்கு அடியில் செல்லும் இரத்தக் குழாய்களில் ரத்தம் செல்வது தடைப்படுவதால் முகம் வெளுத்து விடுகிறது.**



### தெரிஞ்சுக்குவோம் - 2

● சிகரெட்டினால் ஏற்படும் உடற் பாதிப்பை நீக்க, வெள்ளரிப் பிஞ்சும், தர்பூசணிப் பழமும் அடிக்கடி சாப்பிட் டால் நல்லது.

- சு. இலக்குமணசுவாமி




வள்ளி கூவினாள்.

"இன்னும் கொஞ்ச நாள் போனால் இந்த நாட்டு ஆண் பிள்ளைகள் கூட உன்னைப் போலேதான் ஆகி விடுவார்கள். வாளையும் வேலையும் கொண்டு என்ன செய்கிறது என்று கேட்க ஆரம்பித்து விடுவார்கள். வள்ளி! இதைக் கேள். என்னுடைய பாட்டன், முப்பாட்டன் காலங்களில் எல்லாம் எப்படித் தெரியுமா? அப்போது கொல்லுப் பட்டறையில் எல்லாம் வாளும் வேலும் சூலமும் செய்த வண்ணமாயிருப்பார்களாம். ஒவ்வொரு பட்டணத்திலும் கம்மளாத் தெருதான் எப்போதும் 'ஜே ஜே' என்று இருக்குமாம். ராஜாக்களும் ராஜகுமாரர்களும் சேனாதிபதிகளும் கம்மாளனைத் தேடி வந்து கொண்டிருப்பார்களாம். என் அப்பன் காலத்திலேயே இதெல்லாம் போய் விட்டது. வாழைக் கொல்லை அரிவாள்களும் வண்டிக்குக் கடையாணிகளும், வண்டி மாட்டுக்குத் தார்க் குச்சிகளும் செய்து கம்மாளன் வயிறு வளர்க்கும்படி ஆகி விட்டது. என் வயதில் இப்போதுதான் நான் வாளையும் வேலையும் கண்ணால் பார்க்கிறேன்... ஆகா! இந்தக் கைகளிலே மட்டும் முன்னைப் போல் வலிவு இருந்தால்?... இருபது வருஷத்துக்கு முன்னாலே இந்த யுத்தம் வந்திருக்கக் கூடாதா!"

"சரியாய்ப் பேசு, தாத்தா! இவருக்கு நீ புத்தி சொல்லித் திருத்துவாயாக்கும் என்றல்லவா பார்த்தேன்! யுத்தத்துக்குப் போகணும் என்று இவர் ஓயாமல் சொல்லிக் கொண்டிருக்கிறார்...."

"பொன்னனா! அவன் எங்கே யுத்தத்துக்குப் போகப் போகிறான் வள்ளி? பொன்னனாவது உன்னை விட்டு விட்டுப் போகவாவது! துடுப்புப் பிடித்த கை, வாளைப் பிடிக்குமா? பெண் மோகம் கொண்டவன் சண்டைக்குப் போவானா?"

"அப்படி ஒன்றும் சொல்ல வேண்டாம், தாத்தா! இவர் போகணும் போகணும் என்றுதான் துடித்துக் கொண்டிருக்கிறார். மகாராஜாதான் வரக்கூடாது என்கிறார். இளவரசருக்கு நீந்தக் கற்றுக் கொடுக்க இவர் இருக்க வேணுமாம்."

"அடடா! உன்னுடைய அப்பனும் சித்தப்பன்மார்களும் மட்டும் இப்போது இருந்தால், ஒவ்வொருவன் கையிலும் ஒரு வாளையும் வேலையும் கொடுத்து அனுப்ப மாட்டேனா? எல்லாரையும் ஒரே நாளில் காவேரியம்மன் பலி கொண்டு விட வேண்டுமா?" என்று சொல்லிக் கொண்டே கிழவன் பெருமூச்சு விட்டான்.

**வ**ள்ளிக்கு அந்தப் பயங்கரமான சம்பவம் ஞாபகம் வந்தது.

நாலு வருஷத்துக்கு முன்பு கிழவனையும் கிழவியையும் தவிர, குடும்பத்தார் அனைவரும் ஆற்றுக்கு அக்கரையில் நடந்த ஒரு கலியாணத்துக்காகப் படகில் ஏறிப் போய்க் கொண்டிருந்தார்கள். நடு ஆற்றில் திடீரென்று ஒரு சூறாவளிக் காற்று அடித்தது. படகு கவிழ்ந்து விட்டது. அச்சமயம் கரையில் இருந்த பொன்னன் உடனே நதியில் குதித்து நீந்திப் போய்த் தண்ணீரில் விழுந்தவர்களைக் காப்பாற்ற முயன்றான். தெய்வயத்தனத்தினால் வள்ளியை மட்டுந்தான் அவனால் காப்பாற்ற முடிந்தது. மற்றவர்கள் எல்லாரும் நதிக்குப் பலியானார்கள்.

கிழவன் மேலும் சொன்னான் : "என் குலத்தை விளங்க வைக்க நீ ஒருத்திதான் இருக்கிறாய். உன் வயிற்றில் ஒரு குழந்தை பிறந்து விட்டால், பொன்னனை நானே கழுத்தைப் பிடித்துத் தள்ளுவேன், யுத்தத்துக்குப் போ என்று."

"யுத்தம் என்னத்திற்காக நடக்கிறது, தாத்தா! அதுதான் புரியவில்லை" என்றாள் வள்ளி.

"யுத்தம் என்னத்திற்காகவா - மானம் ஒன்று இருக்கிறதே, அதற்காகத்தான்! எருதுக் கொடிக்குப் புலிக் கொடி தாழ்ந்து போகலாமா? தொண்டை நாட்டுக்குச் சோழ நாடு பணிந்து போகிறதா? இந்த அவமானத்தைப் போக்குவதற்காகத்தான்."

"எருதுக் கொடி யாருடையது?"

"இது தெரியாதா உனக்கு? எருதுக் கொடி காஞ்சி பல்லவ ராஜாவினுடையது."

"சிங்கக் கொடி என்று சொல்லு."

"இல்லை, எருதுக் கொடிதான்."

"நான் இன்றைக்குப் பார்த்தேன் தாத்தா! தூதர்களின் கொடியில் சிங்கந்தான் போட்டிருந்தது."

"ஆமாம்; எருதுக் கொடியைச் சிங்கக்

# நான் பேச நினைப்பதெல்லாம் நான் பேச வேண்டும்



"சரளமாக ஆங்கிலம் பேச வேண்டும்
என்று நினைப்பேன்
அழகாக ஆங்கிலம் பேச வேண்டும்
என்று நினைப்பேன்
பிறர் வியக்கும்படி ஆங்கிலம் பேச
வேண்டும் என்று நினைப்பேன்
ஆனால், முடியவில்லையே என்று
எனக்கு வருத்தம், ஏக்கம், ஏமாற்றம்!"

உங்களது வருத்தத்தைப் போக்கிட, ஏக்கத்தை விரட்டிட அழைக்கிறது

**விவேகானந்தா கல்வி நிலையம்**

ஆம். நீங்கள் நினைப்பதை அழகாக, அருமையாக, தயக்கமின்றி,
சரளமாக ஆங்கிலத்தில் பேசிட முறையான, முழுமையான
பயிற்சியினை வழங்குகிறது **விவேகானந்தா கல்வி நிலையம்**

மூன்று லட்சத்திற்கும் மேற்பட்டவர்கள் பயனடைந்துள்ள விவேகானந்தாவின் அஞ்சல்வழி
ஆங்கிலப் பயிற்சியில் நீங்களும் சேர்ந்து பயன்பெற இன்றே கீழ்க்காணும் முகவரிக்கு ஒரு போஸ்ட் கார்டு
எழுதுங்கள் பயிற்சி பற்றிய விபரங்களை உடனே அனுப்புகிறோம் **நேர்முகப்பயிற்சியும் உண்டு**

**உங்களது வெற்றியின் முகவரி**




## விவேகானந்தா கல்வி நிலையம்

தபால்பெட்டி எண் K.A - 4986, 9, நடேசன் தெரு, தி. நகர், சென்னை 600 017.

விவேகானந்தா கல்வி நிலையத் தபால் முறைப் பயிற்சி மாணவர்களுக்கான நேர்முகத் தொடர்பு வகுப்பு (CONTACT CLASS) இம்மாதம் வேலூரில் நடைபெறுகிறது



● செருப்புத் திருட்டு இன்று நேற்றல்ல - தொன்று தொட்டுத் தொடர்வது என்று ஆறுதல் கொள்ளுங்கள். இந்தியாவின் முதல் சஞ்சிகை பெங்கால் கெஜட்டில் ஓர் அறிவிப்பு : 'காலணியை எடுத்துச் சென்றவர் திருப்பிக் கொண்டு வந்து கொடுத்தால் இனாம் அளிக்கப்படும்.'
இப்பத்திரிகை 1780-82 ஆண்டுகளில் வெளிவந்தது.

தகவல் : ஆர். பி. சாரதி

---

கொடியாக மாற்றி விட்டார்கள். ஆனால் எருது பன்றியை ஜயித்து விட்டதால் சிங்கமாகி விடுமா" என்றான் கிழவன்.

"எனக்கு ஒன்றுமே புரியவில்லை, தாத்தா! விவரமாய்ச் சொல்லேன்" என்றாள் வள்ளி.

"சரி, அடியிலிருந்து சொல்லுகிறேன் கேள்!" என்று கிழவன் கதையை ஆரம்பித்தான்.

"நீ பிறந்த வருஷத்தில் இது நடந்தது. அப்போது காஞ்சியில் மகேந்திர சக்கரவர்த்தி ஆண்டுகொண்டிருந்தார். அவருடைய வீர பராக்கிரமங்களைப் பற்றி நாடெங்கும் பிரமாதமாய்ப் பேசிக் கொண்டிருந்த காலம். இந்த உறையூருக்கும் அவர் ஒருமுறை வந்திருந்தார். அவர் விஜயத்தின் ஞாபகார்த்தமாகத்தான் நமது மலையிலே கூட அவருடைய சிலையை அமைத்திருக்கிறது. இப்படி இருக்கும் சமயத்தில், வடக்கே இருந்து வாதாபியின் அரசன் - புலிகேசி என்பவன் பெரிய படை திரட்டிக் கொண்டு தென்னாட்டின் மேல் படையெடுத்து வந்தான். சமுத்திரம் பொங்கி வருவது போல் வந்த அந்தச் சைன்யத்துடன் யுத்தகளத்தில் நின்று போர் செய்ய மகேந்திர சக்கரவர்த்திக்குத் தைரியம் வரவில்லை. காஞ்சிக் கோட்டைக்குள் சைன்யத்துடன் பதுங்கிக் கொண்டார்: கோட்டையைக் கொஞ்ச காலம் முற்றுகையிட்டுப் பார்த்தான் புலிகேசி. அதில் பயனில்லையென்று கண்டு தெற்குத் திக்கை நோக்கி வந்தான். நமது கொள்ளிடத்தின் அக்கரைக்கு வந்துவிட்டான். அப்பப்பா! அப்போது இந்த உறையூர் பட்ட பாட்டை என்னவென்று சொல்லுவேன்! நமது பார்த்திப மகாராஜா அப்போது பட்டத்துக்கு வந்து கொஞ்ச நாள்தான் ஆகியிருந்தது. புலிகேசியை எதிர்க்கப் பலமான ஆயத்தங்கள் செய்து கொண்டிருந்தார். இதற்குள் வடக்கே புலிகேசியின் ராஜ்யத்துக்கே ஏதோ ஆபத்து வந்து விட்டது போலிருந்தது. புலிகேசி கொள்ளிடத்தைத் தாண்டவே யில்லை. திரும்பிப் போய் விட்டான். போகும் போது அந்தக் கிராதகனும் அவனுடைய ராட்சத சைன்யங்களும் செய்த அட்டூழியங்களுக்கு அளவேயில்லையாம். ஊர்களையெல்லாம் சூறையாடிக் கொண்டும் தீ வைத்துக் கொண்டும் போனார்களாம். அதிலிருந்து மகேந்திர சக்கரவர்த்தியினுடைய புகழ் மங்கி விட்டது. 'சாளுக்கரின் பன்றிக் கொடிக்குப் பல்லவரின் ரிஷபக் கொடி பயந்து விட்டது' என்று ஜனங்கள் பேசத் தொடங்கினார்கள். இந்த அவமானத்துக்குப் பிறகு மகேந்திர சக்கரவர்த்தி அதிக நாள் உயிரோடிருக்கவில்லை. அவருக்குப் பிறகு நரசிம்மவர்ம சக்கரவர்த்தி பட்டத்துக்கு வந்தார். இவர் பட்டத்திற்கு வந்ததிலிருந்து புலிகேசியைப் பழிக்குப் பழி வாங்கிப் பல்லவ குலத்துக்கு ஏற்பட்ட அவமானத்தைப் போக்க வேணுமென்று ஆயத்தங்கள் செய்து வந்தார். கடைசியில் ஆறு வருஷங்களுக்கு முன்பு பெரிய சைன்யத்தைத் திரட்டிக் கொண்டு வடக்கே போனார். புலிகேசியைப் போர்க்களத்தில் கொன்று வாதாபி நகரையும் தீ வைத்துக் கொளுத்திச் சாம்பலாக்கி விட்டுத் திரும்பி வந்தார். இந்தப் பெரிய வெற்றியின் ஞாபகார்த்தமாகப் பல்லவர்களின் ரிஷபக் கொடியை நரசிம்ம சக்கரவர்த்தி சிங்கக் கொடியாக மாற்றி விட்டார். அவர் திரும்பி வந்து இப்போது ஒரு மாதந்தான் ஆகிறது, வள்ளி! அதற்குள்ளே..."

இத்தனை நேரமும் கவனமாய்க் கேட்டுக் கொண்டிருந்தவள், "அப்பேர்ப்பட்ட சக்கரவர்த்தியுடன் நமது மகாராஜா எதற்காக யுத்தம் செய்யப் போகிறார் தாத்தா! அவருடன் சிநேகமாயிருந்தாலென்ன?" என்று கேட்டாள்.

"அடி பைத்தியக்காரி..." என்று கிழவன் மறுமொழி சொல்ல ஆரம்பித்தான்.

அப்போது வீதியில் குதிரை வரும் சப்தம் கேட்டது. அந்த வீட்டின் வாசலிலேதான் வந்து நின்றது.

"வீரபத்திர ஆச்சாரி!" என்று யாரோ அதிகாரக் குரலில் கூப்பிட்டார்கள். உடனே கிழவன், "அந்தச் சண்டாளன் மாரப்ப பூபதி வந்து விட்டான். வள்ளி, நீ அவன் கண்ணில் படக் கூடாது. சமையற்கட்டுக்குள் போ. அவன் தொலைந்ததும் உன்னைக் கூப்பிடுகிறேன்" என்றான்.

(தொடரும்)




# அவங்க வழக்கம்...

● தமிழ்நாட்டில் உள்ள பரிசம் போடும் வழக்கம் நைஜீரியாவிலும் உண்டு.

● தாய்லாந்தில் பெண்கள் சொத்துக்களை விற்கக் கணவன் அனுமதி பெற வேண்டும். கணவனுக்கு மட்டுமே விவாகரத்து உரிமை உண்டு அங்கே!

● பாலித் தீவு மக்களுக்கு பொன் வெள்ளி அணிகலன்களில் ஆசை கிடையாதாம். பூக்களை மட்டுமே விரும்பி அணிகிறார்கள்!

● ஹாலந்து நாட்டின் வண்டிகளில் ஓட்டுநர் இருக்கைக்கு முன் மனைவி மக்கள் புகைப்படம் இருக்குமாம்.
வண்டியை விபத்தின்றி ஓட்ட இப்படி ஓர் ஐடியா!

● நைஜீரியாவில் இரட்டைக் குழந்தைகள் பிறப்பது அபசகுனம்! மக்கள் தொகை மிக்க நாடுகளில் இது அபாய சகுனமும் கூட!

● நைஜீரியாவில் பிறக்கும் குழந்தைகள் முகத்தில் நீளவாட்டில் 2, 3, 4 என சூடு போடுவது வழக்கமான மதச் சடங்கு. குழந்தைகள் ஆயுளை நீட்டிக்க அது உதவும் என்பது நம்பிக்கை.

● ஷேக்ஸ்பியர் என்றவுடன் 'வெனிஸ் வணிகன்' நாடகம் நினைவுக்கு வருமே. அந்த வெனிஸ் நகருக்கு ஓர் அபாயம். கடலில் மூழ்கி விடும் ஆபத்தைத் தடுக்க சிமெண்ட் ஊசியாம்!
மனிதனுக்கும், மிருகத்துக்கும் மட்டுமல்ல ஊசி. மண்ணுக்கும் ஊசி அங்கே!

● தமிழ்நாட்டில் ஆடி, மார்கழி மாதங்களில் இந்துத் திருமணங்கள் நிகழ்வதில்லை! இது போல ஜப்பானில் அக்டோபர் மாதம் திருமணம் நடப்பதில்லை. காரணம்? ஜப்பானிய திருமணக் கடவுள் இஸுமோ மண்டலத்துக்கு, கடவுள் மாநாட்டுக்குச் சென்று விடுவதாக ஒரு நம்பிக்கை!

சுவையான செய்திகள் நூலிலிருந்து :
ஆர். பி. சாரதி





●● சூர்தாஸ், கபீர்தாஸ் ஆகியோரின் பாடல்களை வார்த்தைக்கு வார்த்தை அர்த்தத்துடன் தமிழில் யாரேனும் வெளியிட்டிருந்தால் அப்புத்தகம் கிடைக்குமிடம் பற்றிய விவரங்கள் தெரிவிக்கவும்.

- ஆர். ரங்கராஜன்,
டி.வி.எஸ். அண்ட் சன்ஸ் லிட்.,
211, தெற்கு வெளிவீதி,
மதுரை - 625 001.

●● மின்சாரம் தடைப்பட்டால் உடனே எரியும் எமெர்ஜென்ஸி லைட் தயாரித்து விற்பனை செய்ய விரும்புகிறேன். தொழில் நுணுக்கம் தெரிந்தவர் கற்றுத் தர வேண்டுகிறேன்.

- க. நமசிவாயம்,
சிவா பிராய்லர்ஸ்,
83, வாணக்காரத் தெரு,
திருத்துறைப்பூண்டி
- 614 713.

●● வி.சி. கோபாலரத்தினம் எழுதிய "ஜோர்ட் விநோதங்கள்" புத்தகம் தேவை. பழைய பிரதி விலை தந்து பெற்றுக் கொள்கிறேன்.

- எஸ். வேலுசாமி,
48, நேதாஜி ரோடு,
பொள்ளாச்சி
- 642 001.

●● குறைந்த முதலீடு; நல்ல வருமானம் கிடைக்கும் சிறு தொழில் செய்யும் முறை கைவசமுள்ளது. சிறு தொழில் மையத்தில் பதிவு செய்யப்பட்டது. விருப்பமுள்ளவர்கள் அணுகவும்.

- பி. ஆர். கிருஷ்ண மூர்த்தி,
K-5, ராஜீவ் அப்பார்ட்மெண்ட்,
பொன்னேரி
601 204.



●● பிரெஞ்சு எழுத்தாளர் விக்டர் ஹியூகோ எழுதிய நாவலைத் தமிழில் தந்தால் வெளியிடுகிறேன். தொடர்பு கொண்ட பிறகு மொழிபெயர்ப்பு தொடங்கவும்.

- புத்தகப்பித்தன்,
இமயப் பதிப்பகம்,
8, நிலா தெற்கு வீதி,
நாகப்பட்டினம்
- 611 001.

●● தோல் சம்பந்தப்பட்ட பொருள்கள் செய்து ஏற்றுமதியாளருக்கு சப்ளை செய்து வருகிறேன். நேரிடையாக ஏற்றுமதி செய்ய "ஆர்டர்" கிடைத்துள்ளது. தொழிலை விரிவாக்கம் செய்ய ரூ. 50,000 மடங்குகளில் முதலீடு செய்யக்கூடிய பங்குதாரர்கள், பார்ட்னர்கள் தேவை.

- இரா. ஆறுமுகம்,
சிவாஸ் லெதர் இன்டஸ்ட்ரீஸ்,
12, சிவசங்கரன் தெரு,
நாகல்கேணி,
குரோம்பேட்டை,
சென்னை - 600 044.

●● தமிலன் எழுதிய "அம்பிகாபதி" யாரிடமாவது இருந்தால் வி. பி. பி. யில் அனுப்பவும்.

- ப. வேலாயுதப் பெருமாள்,
802, கற்பக நகர்,
மதுரை - 625 007.

●● தேனீ வளர்க்க விரும்புகிறேன். தேனீ பெட்டி - ராணி தேனீ எங்கு கிடைக்கும் என்ற விவரம் தெரிவிக்க வேண்டுகிறேன்.

- டி. எம். இராகவன்,
போந்தவாக்கம்
(அஞ்சல்)
ஆரணி (வழி) 601 101.

●● "மாயா" என்ற பெயரில் நான் எழுதிய சிறுகதைத் தொகுப்புக்கள் "மணப்பந்தல்"; "பெண்மை வாழ்ந்தது" (இமய பதிப்பகம் வெளியீடு) ஆகியவற்றில் ஒன்றையோ அல்லது இரண்டையுமோ ரிஜிஸ்தர் தபாலில் அனுப்பினால் சன்மானம் வழங்குகிறேன்.

- கே. நாராயணசாமி,
230/E, Sector - 8,
UKKUNAGARAM,
VISAKHAPATNAM, (A.P.)

●● "தமிழில் எழுதிய தெலுங்கர்" என்னும் தலைப்பில் நூல் எழுதி வருகிறேன். தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்ட தமிழ் எழுத்தாளர்கள் தங்களைப் பற்றிய குறிப்புகளை அனுப்ப வேண்டுகிறேன்.

- டி. ஆர். குருசாமி (மதுரி),
பிளாட் 25, மாக்மிலன் காலனி,
நங்கைநல்லூர்,
சென்னை - 600 061.

(பாலம் மூலம் இணையும் 'கல்கி' வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் 'கல்கி' நிறுவனம் பொறுப்பு ஏற்பதற்கில்லை. - ஆர்.)

பாலம்





# கணக்... குணுக்ஸ்!

● '=' இந்தக் கணிதக் குறியைக் கண்டுபிடித்தவர் ராபர்ட் ரெக்கார்டு என்ற கணித நிபுணர். ஒரே அளவான கோடுகள் ஒன்றுக்கொன்று சமம் என்பது போலவே, இக் குறியின் இருபுறமும் உள்ள எண்களும் சமம் என்று எடுத்துக் கூறுவதுதான் '='.

● வர்க்கமூலம் (ஸ்கொயர் ரூட்). இந்த வார்த்தை 'ரேடிக்ஸ்' என்ற லத்தீன் வார்த்தையிலிருந்து வந்தது. இதனை முதலில் 'ɣ' என்று குறிப்பிட்டனர். நாளடைவில் இது 'γ' என மருவி, இப்போதுள்ள √ என்று ஆகி விட்டது. கி. பி. 1525 முதல் இது நடைமுறையில் இருந்து வருகிறது.

● ஒன்று, இரண்டுக்கு சமம் என்று உங்களால் நிரூபிக்க முடியுமா? இதோ நிரூபணம்.

a=b என்று கொள்ளுவோம்.
அப்படியெனில் $ab=a^2$
இதிலிருந்து $b^2$ ஐ கழிக்க,
$ab-b^2 = a^2-b^2$
∴ b = a+b
a = b என்று ஆரம்பத்திலேயே எடுத்துக் கொண்டு விட்டதால்,
b = B+B
b = 2b
∴ 1=2

இது உண்மையில் சாத்தியமல்ல. இது போன்று, சாத்தியமில்லாத வற்றையும், நிஜம் என நிரூபிக்கும் விளையாட்டுக் களை 'Arithmetical fallacies' என்பார்கள்.

● கூகோல் (googol) என்றால் என்ன? ஒன்று போட்டு அடுத்து நூறு சைபர்கள் போட்டால் அந்த எண்ணுக்குத்தான் கூகோல் என்று பெயர்.

● எண் 99ஐ டாக்டர்களின் எண் என்பார்கள். காரணம் : டாக்டர்கள், நோயாளிகளை ஸ்டெதாஸ்கோப்பினால் பரிசோதிக்கும் போது 99ஐ திரும்பத் திரும்ப சொல்லச் சொல்லுவார்கள். அப்படிக் கூறும் போது எழும் குரலின் தன்மையைக் கொண்டு, அந்த நோயாளிக்கு, நிமோனியா நோய் இருக்கிறதா என்று கண்டறிவார்கள்.

● ஒரு விநாடிக்கு ஒரு எண், தினத்துக்கு ஏழு மணி நேரம் வீதம் எண்ணினால், ஒரு பில்லியன் வரை எண்ணி முடிக்க 109 ஆண்டுகளாகும்.

● இந்திய வரலாற்றில் முதல் கணித நிபுணராய்க் கருதப்படுபவர் பாஸ்கராசார்யா. அவரது கணித நூலான 'லீலாவதி' ஒரு கணித பொக்கிஷமாய்க் கருதப்படுகிறது. லீலாவதி, பாஸ்கராசார்யாவின் மகள்.

● உமர்கயாம், 'இன்பவியல்' கவிஞர் என்பதுதான் அனைவரும் அறிந்த விஷயம். அவர் ஒரு வானியல் நிபுணரும், கணித நிபுணரும் கூட என்பது பலரும் அறியாத செய்தி.

தொகுப்பு : **மௌலக்ஷ்மி**



பணத்தின் அருமை தெரிந்தவர்கள் நாங்கள்.

# இதோ ஓர் அணு விஞ்ஞானி

விளையும் பயிர் முளையிலே தெரியும். அன்பு மகனும் அப்படித்தான். பத்து வயதிலேயே அவன் அறிவாற்றலைத் தெரிந்து கொள்ள முடிகிறது. ஆமாம், சமயங்களில் அவனுடைய ஆசிரியர்களே அவனிடம் கேட்டு சந்தேக விளக்கம் பெறுகிறார்கள். அப்படியிருக்கும்போது, அவனுடைய எதிர்காலத்தை உறுதி செய்ய வேண்டாமா? அவனுக்கு மிகச் சிறந்த பல்கலைக்கழகத்தில் உயர்கல்வி அளிக்க வேண்டும். கல்விக்காக வெளிநாட்டுக்கும் கூட அனுப்பி வைக்க வேண்டும். அதற்கும் வழி செய்திருக்கிறேன். ஒரு கணிசமான முதலீடு. நம்பகமான நிறுவனமான ஸ்ரீராமில். என் விருப்பம் நிச்சயம் நிறைவேறும்.

ஸ்ரீராம் — லாரிகளுக்கு நிதியுதவி அளிப்பதில் முன்னணி நிறுவனம். அளிக்கும் கடனுதவியை 100 சதவிகிதம் திரும்பப் பெற்று விடுவதால் பணத்துக்கு மிகுந்த பாதுகாப்பு. ரூ.190 கோடிக்கும் கூடுதலான டெபாசிட் ஆதாரம். பின்பலமாக ரூ.700 கோடி சொத்து மதிப்புள்ள ஸ்ரீராம் நிறுவனங்கள். சிறந்த முறையில் உங்களுக்குச் சேவையளிக்க நாடு முழுவதும் 65-க்கும் மேற்பட்ட அலுவலகங்கள்.

For statutory details please refer to our advt. in The Hindu dated 9.7.93.




**ஸ்ரீராம் இன்வெஸ்ட்மென்ட்ஸ் லிமிடெட்**
**ஸ்ரீராம் டிரான்ஸ்போர்ட் ஃபைனான்ஸ் கம்பெனி லிமிடெட்**
**ஸ்ரீராம் சிடியூனியன் ஃபைனான்ஸ் லிமிடெட்**

டெல்கோ, அசோக்லேலண்ட், சிடியூனியன் வங்கி ஆகிய நிறுவனங்களின் ஈக்விடி பங்கேற்புடன்.

நிர்வாக அலுவலகம்: மூகாம்பிகா காம்ப்ளெக்ஸ், 4 லேடி தேசிகா ரோடு, மயிலாப்பூர், சென்னை 600 004. போன்: 4990960, 4991363, 4993968.

**டெபாசிட்டுகள் திரட்டும்**
**கேம்பெய்ன் இப்போது**

**அதைவிட உங்கள் அக்கறைகளையும் உணர்ந்தவர்கள்.**



# 19

லஞ்சம்' என்ற சொல் வேதபுரத்து மொழி அகராதியிலே கிடையாது. ஏனெனில், இம் மொழியில் 'ல' கரத்தை முதலெழுத்தாகக் கொண்டு எந்தச் சொல்லையும் படைக்க இயலாது. அப்படிப் படைத்தால் அது இலக்கண வழு...' ('வேதபுரத்து மொழியியல் வரலாறு... நேமிநாதப் பாவலர், பக். 1338-'39)

அபூர்வா பிரமைபிடித்தாற் போல் உட்கார்ந்திருந்தாள். அவளைச் சிறிது நேரம் ஒன்றும் புரியாமல் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த வனிதா கேட்டாள் : "என்ன சொன்னாருங்க அவர்? ஏன் இப்படி உட்கார்ந்திருக்கிங்க?"

அபூர்வா மௌனமாக அவளை ஏறிட்டு நோக்கினாள்.

"என்னங்க?"

"நான் இப்பொ துணைத் தலைவர்..."

"எனக்குப் புரியலே" என்றாள் வனிதா.

"எனக்குந்தான்" என்றாள் அபூர்வா.

"அவர் அப்படிச் சொன்னாரா?"

"ஆமாம். என்னைத் தேர்தலுக்கு நிக்க வைக்கப் போறதில்லே. தேர்தல் இல்லாமலேயே துணைத் தலைவர்."

"அதுக்காகத்தான் இவ்வளவு பாதுகாப்பா? இவங்களுக்குத் தெரியாதா நீங்க துணைத் தலைவர்ங்கிறது பற்றி?"

"தெரிஞ்சதா தெரியலே. நஞ்சுண்டன் வந்து சொல்றதா சொன்னாரு."

வனிதா திடீரென்று உற்சாகம் மேலிட்டு அபூர்வாவின் கைகளைப் பற்றிக் கொண்டாள்.

"நான் துணைத் தலைவரோட தோழி, 'செக்ரட்ரி'... எல்லாம்" என்று கூறிக் கொண்டே பெரிதாகச் சிரித்தாள்.

"எனக்கு எதற்காக இத்தனை விளம்பரம், துணைத் தலைவர் பதவி? எனக்கு ஒண்ணும் புரியலே."

**போ**லீஸ் உடையில் ஒருவர் அப்பொழுது உள்ளே நுழைந்தார். ஐம்பது வயதிருக்கும். ஆக்ரோஷமான மீசை. நல்ல உயரம், அதற்கேற்ற உடல்வாகு. பளு தூக்குபவராக இருக்க வேண்டுமென்று அபூர்வாவுக்குப்பட்டது.

"குட்மார்னிங், மேடம்... உங்களைப் பார்க்க ஒரு பெரிய கூட்டம் வந்துகிட்டிருக்கு. சமாளிக்க முடியாம போகறத்துக்கு முன்னாலே, நீங்க இந்த வீட்டை விட்டுப் புறப்படறது நல்லது."

"நீங்க யாரு?" என்றாள் அபூர்வா.

"ஐ ஆம் ஸாரி... நான் யாருன்னு சொல்லாமயே பேசிக்கிட்டிருக்கேன்.... நான் துணை டி.ஜி., தனபாலன்..."

"எதுக்குப் பாக்க வந்துக்கிட்டிருக்காங்க? நான் எங்கே போகணும்?"

"இன்னிப் பேப்பர் நீங்க பாத்திருக்கலாம். உங்களைப் பாராட்ட வராங்க. உங்களுக்கு வேற இடம் ஏற்பாடாயிருக்குது. மேலிடத்து உத்தரவு. சீக்கிரம் புறப்படுங்க."

"என்னைப் பாக்க ஒருவர் இப்பொ வருவாரு. நந்கண்டனைத் தெரியுமா உங்களுக்கு?"

"இங்கே யாரும் உங்களைப் பாக்க வர முடியாது. போலீஸ் அரை மைல் வட்டாரத் துக்குச் சுத்தி வளைச்சுகிட்டிருக்காங்க. உங்களை யாருக்கும் தெரியாமெ, கூட்டம் தொந்தரவு செய்யறதுக்கு முன்னாலே, அந்த வீட்டுக்குக் கடத்திகிட்டுப் போகணும்னு உத்தரவு.. தயவு செய்து புறப்படுங்க.."

"இந்த வீட்டைக் காலி செய்யணுமா?"

"அதெ பத்தி எனக்குத் தெரியாது. இப்பொ தேவையான பொருள்களை எடுத்துகிட்டுச் சீக்கிரம் புறப்படுங்க..."

**வ**னிதாவும் அபூர்வாவும் பதினைந்து நிமி ஷங்களில் வெளியே செல்லத் தயாராக இருந்தனர். கையில் இரண்டு சின்ன சூட்கேஸ். அவர்களை வீட்டின் பின்புறமாக, கறுப்புக் கண்ணாடியால் மூடப்பட்டிருந்த, ஒரு ஏ.ஸி. காரில் துணை டி.ஜி. கூட்டிக் கொண்டு சென்றார்.

சந்து பொந்துகளையெல்லாம் கடந்து கார் சென்றது. பிரதான சாலைகளி லெல்லாம் ஜனத் திரள். போலீஸ் மிகவும் சிரமத்துடன் சமாளித்துக் கொண்டிருந்தனர்.

"இத்தனை கூட்டம் என்னைப் பார்க்கவா?" என்றாள் அபூர்வா.

"ஆமாம், மேடம்."

"இது உங்களுக்கு ஆச்சர்யமா படலே? இந்த நாட்டிலே தலைவரைத் தவிர வேற யாரைப் பாக்கவும் இவ்வளவு கூட்டம் வராதுன்னு நான் நினைச்சேன்."

தனபால் பதில் சொல்லவில்லை.

"இது உங்களுக்கு ஒரு புது அநுபவமில்லே?" என்றாள் அபூர்வா.

"எது மேடம்?"

"நான் இப்பொ சொன்னது உங்க காதில் விழலியா?"

"விழுந்தது."

"பதில் சொல்லலியே?"

மௌனம்.

"நீங்க என்னைப் பத்தி என்ன நினைக்கறீங்க?" என்றாள் அபூர்வா.

மௌனம்.

"மிஸ்டர் தனபால், உங்களைத்தான் கேக்கறேன்."

"நீங்க செய்திருக்கிறது சாதாரண சாதனையில்லே மேடம். இந்திர பிரஸ்தத்தை ஒரு இக்கட்டான நிலையிலேந்து காப்பாத்தியிருக்கீங்க. அசாதாரண அறிவாற்றலும், பிரமிக்கத்தக்க

இந்திரா பார்த்தசாரதி

துணிச்சலும் இல்லாட்டா இந்தக் காரியத்தைச் செய்திருக்க முடியாது. நம் தலைவர் திறமையைப் பாராட்டறார்ங்கிறதிலே ஆச்சர்யமேயில்லே..."

"ஆனா இதுவரைக்கும் யாரையும் என்னைக்கும் பாராட்டினதா தெரியலியே? அப்போ இங்கே திறமையே இல்லேன்னு அர்த்தமா? வேதபுரத்தைப் பத்தி இதுவா உங்க அபிப்பிராயம்?"

"நோ. நோ. மேடம்... நீங்க வேதபுரத்து வாசியா ஆனதினாலேயே உங்களுக்கு இவ்வளவு திறமை ஏற்பட்டிருக்கலாம். அதோட மட்டுமில்லாமெ, தலைவரோட ஆசி உங்களுக்குப் பரிபூரணமா இருக்குது, மேடம்... இந்த ஆசிதான் உங்க வெற்றிக்குக் காரணம். நான் அஞ்சு வருஷமா ஒரே பதவியிலே தேங்கிக் கிடக்கறேன், காரணம் எனக்கு தலைவரோட பரிபூரண ஆசி கிடைக்கறதுக்கான கொடுப்பினை இல்லே. ஒருவேளை உங்களோட ஆசி கிடைச்சா என் 'பிரமோஷனு'க்கு வாய்ப்பு ஏற்படலாம். உங்களைப் பாத்தா தலைவரைப் பார்க்கிற மாதிரி இருக்குது..."

"தலைவரைப் பார்த்திருக்கீங்களா?"

"நோ. நோ மேடம். கடவுளை நம்மாலே பார்க்க முடியுமா? ஆனா கடவுள் மனசுக்கு மிகவும் பிடிச்சவங்களைப் பார்த்தா, கடவுளைப் பாக்கிற மாதிரி... ஜனங்க கடவுளைப் பாக்கலே, ஏசுநாதரைப் பார்த்தாங்க. அந்த மாதிரி. நான் கிறிஸ்டியன். எனக்குச் சமய நம்பிக்கை உண்டு."

"நான் என்ன பண்ணணுங்கிறீங்க?"

"தலைவரோட அந்தரங்கப் படையிலே டைரக்டர் போஸ்ட் காலியாயிருக்கு."

"எவ்வளவு?" என்றாள் வனிதா.

'ட்ரைவர்' இன்றி, காரை ஓட்டிக் கொண்டு சென்ற தனபால் வனிதாவைத் திரும்பிப் பார்த்தார்.

"என்ன சொன்னீங்க, மேடம்?"

"எவ்வளவு 'ரேட்'...?"

அவளை நம்புவதா கூடாதா என்ற தயக்கத்தில் அவர் இருப்பதை அவர் மௌனம் காட்டிக்காட்டியது.

"எவ்வளவுன்னு கேட்டுக்கிட்டிருக்கேனில்லே?"

"நீங்க சொல்லுங்க மேடம்."

"பத்து" என்றாள் வனிதா.

தனபால் இரண்டாவது தடவையாகத் திரும்பிப் பார்த்தார். இதைச் சொல்ல வனிதா யார் என்பது போலிருந்தது அவர் பார்வை.

"பத்து அதிகம்னு சொல்ல முடியாது. நீங்க ஒரே வருஷத்திலே அதைச் சம்பாதிக்கலாம்" என்றாள் வனிதா.



அபூர்வாவின் மௌனம், வனிதா சொல்வதையெல்லாம் ஆமோதிப்பது போலிருந்தது.

"மேடம் உங்களுக்கு இவ்வளவு பெரிய வீடு ஏற்பாடு செய்திருக்காங்களே, நீங்க..." அவர் மேலே என்ன சொல்வதென்று தெரியாமல் தயங்கினார்.

"சொல்லுங்க..." என்றாள் வனிதா.

"நீங்க யார் மேடம்? உங்களுக்கும் இந்திரபிரஸ்தத்துக்கும் என்ன சம்பந்தம்? இதிலே ஏதோ பெரிய அரசியல் விவகாரமெல்லாம் இருக்குதுங்கிறாங்க..."

"யாருங்கிறாங்க?" என்றாள் வனிதா.

"அமைச்சர்களுக்கே ஒன்றும் புரியலே. நஞ்சுண்டனைக் கேட்டா அவருக்கும் தெரியாதுங்கறாரு.. நஞ்சுண்டன் தலைவருக்கு வேண்டியவர்னு பேச்சு. அவர்தான் உங்களைக் கொண்டு வந்தது. இப்போ..."

"சொல்லுங்க..."

"அவரையும் தாண்டி உங்க செல்வாக்கு பரவியிருக்குது... நான் உங்களுக்கே அந்தரங்கப் பாதுகாவல் டைரக்டரா இருக்கத் தயாரா இருக்கேன். உங்க சாமர்த்தியத்திலே கொஞ்சமானும் நான் கத்துக்க வேணாமா?"

"அப்போ அந்தத் தலைவரோட அந்தரங்கப் படை டைரக்டர் பதவி?" என்றாள் வனிதா.

"எனக்கு அம்பது வயசுதான் ஆறது. அம்மா மனசு வச்சாங்கன்னா, அப்புறம் அந்தப் பதவி வாங்கித் தர மாட்டாங்களா? எனக்குக் கராத்தே தெரியும். 'ஸ்போர்ட்ஸ்மென்', டென்னிஸ் விளையாடுவேன்."

"செஸ்....?" என்றாள் வனிதா.

அபூர்வா அவனை ஆச்சர்யத்துடன் நோக்கினாள்.

"கத்துக்கறேன், மேடம்."

"சரி... இதுக்கு எவ்வளவு? நான் அம்மாகிட்டே சொல்லி சிபாரிசு பண்றேன்."

"நீங்க சொல்லுங்க மேடம்."

"அதே பத்து" என்றாள் வனிதா.

"சரி..."

**கா**ர் வீட்டருகே போய் நின்றது. மிகப்

"அந்தக் கடையில மட்டும் ஏன் கடனே கேட்க மாட்டேங்கிறீங்க?"
"அங்கதான் 'கடன் எலும்பை முறிக்கும்'னு போர்டு போட்டிருக்கே!"
— வி. சைமன்

பெரிய வீடு. வாசலில் போலீஸ் பாதுகாப்பு.

அவர்கள் இறங்கியதும், போலீஸ் படையினர் 'சல்யூட்' செய்தனர்.

இவ்வளவு பெரிய வீட்டைப் பார்த்ததும், அபூர்வாவுக்குக் கொஞ்சம் அச்சமாக இருந்தது.

ஒரு பெரிய அரசாங்க அலுவலர் - அவரைப் பார்த்தால் அப்படித்தான் தோன்றியது - அவர் அபூர்வாவைக் கண்டதும், மிகப் பணிவாக அவளிடம் வந்தார்.

அவர் அவளிடம், ஒரு பட்டுத் துணியால் மூடப்பட்டிருந்த 'சீல்' வைக்கப்பட்ட ஒரு ஃபைலை நீட்டினார்.

வனிதாவை வாங்கிக் கொள்ளும்படி அபூர்வா சைகை செய்தாள்.

அபூர்வா நாற்காலியில் உட்கார்ந்தாள். வனிதா அதை வாங்கிக் கொண்டது, அந்த அலுவலருக்குப் பிடிக்கவில்லை என்பது அவர் முகபாவத்திலிருந்தும் தெரிந்தது.

"வனிதா அதைப் பிரி."

வனிதா 'ஸீலை'ப் பிரித்து அபூர்வாவிடம் அந்த ஃபைலை நீட்டினாள்.

அதைப் படித்ததும் அவள் முகத்தில் ஒரு முறுவல்.

"தாங்க்யூ" என்றாள் அபூர்வா அலுவலரிடம்.

தனபால் அந்த ஃபைலில் என்ன செய்தி இருந்ததென்று அறியும் ஆவல் முகத்தில் வெளிப்படையாகத் தெரிய, ஆனால் அதை மறைக்க முயன்று தோற்று, அபூர்வாவையே பார்த்துக் கொண்டு நின்றார்.

"நீங்க போகலாம், மிஸ்டர் தனபால்" என்றாள் வனிதா.

அபூர்வாவின் உத்தரவுக்காகக் காத்திருப்பது போல், தனபால் தொடர்ந்து நின்றார்.

"இதோ பாருங்க, நான் ஏதாவது சொன்னா, அது அம்மா சொன்ன மாதிரி... புரியுதா? நான் அவங்க செக்ரட்ரி மட்டுமில்லே, அவங்களோட ஆலோசகர். இல்லீங்களா, அம்மா?" என்றாள் வனிதா.

"கரெக்ட்... உங்க பேரென்ன?" என்று அபூர்வா அந்த அலுவலரைக் கேட்டாள்.

"என் பேர் வெங்கட்ராமன். நான் பல வருஷங்களா தலைவரோட அந்தரங்கப் பணியாள்."

"பணியாளா? அடிமைங்கிற மாதிரி சொல்றீங்களே?" என்றாள் வனிதா.

"கரெக்ட்" என்றாள் அபூர்வா.

"இந்த வீட்டுக்குப் பாதுகாப்பு சரியாக இருக்குதான்னு நான் பாக்கணும்" என்றார் தனபால்.

அபூர்வா பதில் சொல்லவில்லை. அவள் வெங்கட்ராமனைக் கேட்டாள், "நஞ்சுண்டன் எங்கே?"

இந்தக் கேள்வியை எதிர்பார்க்காது போல் அவர் சிறிது திடுக்கிட்டார்.

சிறிது நேரம் கழித்துச் சொன்னார்.

"அவரை இன்னும் கொஞ்ச நேரத்திலே நீங்க பார்ப்பீங்க... அவர் ஒரு முக்கிய 'மீட்டிங்'லேருக்காரு."

"மிஸ்டர் தனபால்... நீங்க போகலாம்" என்றாள் வனிதா.

தனபால் அபூர்வாவைப் பார்த்துச் சொன்னார்.

"இந்த வீட்டிலே பாதுகாப்பு சரியாயிருக்கான்னு பாத்திட்டுப் போறேன்."

"எல்லாம் சரியாயிருக்கு.." என்றார் வெங்கட்ராமன், சிறிது எரிச்சலுடன். அந்த வீட்டுக்கு அவர்தான் பொறுப்பு ஏற்று, ஏற்பாடுகள் செய்திருக்கிறார் என்று அபூர்வாவுக்குத் தோன்றிற்று.

"இல்லே, நான் பாத்தாகணும்" என்றார் தனபால்.

"நீங்க பாக்க வேணாம்" என்றாள் அபூர்வா.

"இது என் பொறுப்பு, மேடம்..."

"இனிமேயில்லே.. தலைவர்கிட்டே சொல்லி உங்களை வேலையை விட்டு அனுப்பலாம்னுருக்கேன்."

தனபால் திடுக்கிட்டார். பிறகு சமாளித்துக் கொண்டு கேட்டார். "இதைச் செய்ய நீங்க யார் மேடம்?"

"துணைத் தலைவர். இதோ.. இந்த ஃபைல்படி நான் துணைத் தலைவர், தலைவரோட ஆணை. புரியுதா? உங்களை லஞ்சக் குற்றத்துக்காக 'டிஸ்மிஸ்' செய்யும்படி தலைவர்கிட்டே சொல்லப் போறேன். புரியுதா...?" என்றாள் அபூர்வா.

" 'லஞ்சம்'ங்கிற வார்த்தை வேதபுரத்து மொழி அகராதியிலேயே கிடையாது, மேடம்... வேணும்னா தலைவரைக் கேட்டுக்கங்க..." என்று சொல்லி விட்டு வெளியேறினார் தனபால்.

(தொடரும்)

# தொலைந்த இளமை!



□ உலகெங்கிலும் குழந்தைத் தொழிலாளர்கள் பெருமளவில் அபாயகரமான வேலைகளில் ஈடுபடுத்தப்படுகிறார்கள். கிட்டத்தட்ட பெரியவர்கள் செய்யும் அனைத்து வேலைகளையும் சிறுவர், சிறுமியர் செய்கிறார்கள்.

மேற்கு வங்காளத்தில் ஒரு செங்கல் சூளையில் வேலை செய்யும் ஒரு சிறுவனின் புகைப்படம் டோக்கியோவை மையமாகக் கொண்ட 'ஆசியா பசிபிக் கல்சுரல் சென்டரால்' பரிசுக்குரியதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது.

யுனெஸ்கோ விருது பெறும் இந்தப் படத்தை எடுத்தவர் சௌரப் தாஸ்.

— பழனி

நன்றி : மீட்டே





• தேவா • கமல் • மணிரத்னம் • கே.பி.

● கமலின் 'நம்மவர்' எப்படியும் தீபாவளிக்கு வந்து விட வேண்டும் என்று தயாரிப்பாளர் பக்கத்தில் முடிவு செய்து விட்டபடியால் கதைப்படி ஊட்டியில் படமாக்க வேண்டிய காட்சிகளையெல்லாம் விஜயா வாஹினியிலும் தரமணியிலும் செட் போட்டு முடித்து விட்டார்களாம். ஊட்டியை 'செட்'டில் அடக்குவது எப்படி என்று யோசித்துக் கொண்டே இருங்கள். அதற்குள் இன்னொரு நியூஸ். 'மகாநதி', போதிய விளம்பரம் இல்லாததால் எதிர்பார்த்த அளவில் ஓடவில்லை. ஆகவே, 'நம்மவருக்கு' பிரமிப்பு ஏற்படுத்தும்படியாக விளம்பரம் செய்யும் படி தயாரிப்பாளரிடம் சொல்லியிருக்கிறாராம் கமல்!

● தேவா, சப்தம் போடாமல் 1330 திருக்குறளுக்கும் ட்யூன் போட்டு வைத்திருக்கிறார். விரைவில் கேஸட் வரப் போகிறது. 'பிறந்ததற்கு அடையாளமாக ஏதாவது செய்து விட்டுப் போக வேண்டாமா? அதுதான்!' என்கிறார் தேவா.

● நாகார்ஜுன் - ஸ்ரீதேவி நடித்த ஒரு தெலுங்குப் படம் (நாட்டுக்கு நல்ல தீர்ப்பு) தமிழில் மொழிமாறி வரப் போகிறதென்பது ஒரு செய்தி அல்ல. ஆனால் கதாசிரியர் மணிரத்னம் என்பது நியூஸ் அல்லவா?

● 'சதி லீலாவதி'யை அடுத்து கமல் தயாரிப்பில் பாலசந்தர் இயக்கும் புதிய படம் பிப்ரவரியில் தொடங்கவிருக்கிறது. இந்தப் படத்தில் இயக்குநர் சிகரமும் இசைஞானியும் மீண்டும் இணைய வாய்ப்பு இருப்பதாகப் பட்சி சொல்கிறது. பாலம் கட்டுபவர் : கமல்.



• கௌதமி

● கௌதமி படப்பிடிப்பு இடைவேளைகளில் எப்போதும் படித்துக் கொண்டேயிருக்கிறார். ஏதாவது கோர்ஸ் சேர்ந்திருக்கிறாரா என்று கேட்க எட்டிப் பார்த்தால்... ப்பூ...! அத்தனையும் ஆங்கில நாவல்கள். 900 பக்கங்கள் கொண்ட 'குவீன்' (ராணி) என்னும் நாவலை சமீபத்தில் படித்து முடித்ததாகச் சொன்னார் கௌதமி. சீக்கிரம் சினிமாவுக்குக் கதை எழுதப் புறப்பட்டாலும் ஆச்சர்யம் இல்லை!

● காலச் சக்கரம் என்ன ஆயிற்று?
நகரவேயில்லையே
என் வாழ்க்கை.

தன் முயற்சியில் சற்றும் தளரா
விக்ரமன்போல
மீண்டும் மீண்டும்
அலைகள்.

எந்தப் புதுக் கவிஞரின் கவிதைகள் என்று அறியத் துடிக்கும் அன்பர்கள் கவனத்துக்கு : கஸ்தூரி!

- ராம்கம்பர்

# சினி சிப்ஸ்

ஏன் இப்படிச் செய்தார்?

ஆயிரமாவது முறையாக என்னுள் கேள்வி அலைகள்.

ராகவன் கண்விழித்தால்தான் தெரியும். கட்டிலில் படுத்திருக்கும் கணவனைப் பார்த்தேன். கண்களில் அனிச்சையாய் நீர் சுரந்தது.

நேற்று இரவு எட்டு மணிக்கு வந்த போன் செய்தி மின்னலுடன் கூடிய இடியாய் என்னைத் தாக்கியதை நினைத்தால் உடம்பு இன்னும் நடுங்குகிறது.

தொலைபேசி இலாகாவில் டெலிபோன் ஆபரேட்டராய் வேலை செய்கிறேன். நேற்று மதியம் இரண்டிலிருந்து இரவு பத்து மணி வரை டூட்டி.

செய்தி அறிந்ததும், ஆட்டோ பிடித்து ஆஸ்பத்திரிக்குள் நுழைந்தவள்தான். இன்னும் வெளியேறவில்லை.

"மேடம், உங்க கணவர் பால்கனியிலிருந்து கீழே விழுந்துட்டார். தலையிலே நல்ல அடி போலிருக்கு. இதோ நர்சிங்ஹோமில் சேர்த்திருக்கோம்."

கீழ்வீட்டு இளைஞன் போனில் கூப்பிட்டுச் சொன்னான். அடுக்கு மாடிக் குடியிருப்பு. அதில் முதல் மாடியில் எங்கள் இருப்பிடம்.

"பால்கனியிலிருந்து விழுந்து விட்டாரா? எப்படி?"

எனக்குள் முதலில் எழுந்த கேள்வி, விசாரிக்க வந்த அனைவர் மனதிலும் கூட உண்டாகியிருப்பதை அவர்களின் பேச்சு உணர்த்தியது.

பால்கனி கைப்பிடிச்சுவருக்கு மேலே, ஒரு முழ உயரத்துக்கு இரும்பு க்ரில் வைத்திருக்கிறது. கிட்டத்தட்ட நான்கடி உயரமிருக்கும், சுவரும் க்ரில்லும் சேர்ந்தால்.

தானாகவே விழுந்தால்தான் உண்டு. வேண்டுமென்றே! இல்லை யாராவது தூக்கிக் கீழே போட்டால்தான் விழ வாய்ப்புண்டு.

ராகவன் நிச்சயம் தானாகவே ஏறி, எம்பி குதித்திருக்கிறான்.

தற்கொலை?!

அனைவர் மனதிலும் ஊசலாடும் கேள்வி. இவளிடம் நேரடியாய் சொல்லப் பயந்து குசுகுசுவெனப் பேசிக் கொண்டார்கள்.

மாமியார் மட்டும் தைரியமாய்க் கேட்டு விட்டாள்.

"ஏன்டிம்மா, உனக்கும் அவனுக்கும் நடுவில் ஏதாவது மனஸ்தாபமா?"

வார்த்தைகளின் உள்ளே கொக்கி போட்ட கேள்வி புரிந்தது.

உன்னுடைய ஏதோ ஒரு செயலோ, சொல்லோ பிடிக்காமல்தான் என் பிள்ளை தற்கொலைக்கு முயற்சித்திருக்கிறான்.

அந்த வருத்தத்திலும் கோபம் வந்தது. என்னை சடாரென்று எப்படிக் கழற்றி, குற்றவாளியாக்கி விட்டார்கள் என்ற துக்கம் பீறிட்டது.

வீட்டுக்கு வீடு வாசற்படி. கணவன், மனைவி என்றான பிறகு, உறவு எப்படி இயல்போ, அது போல பிணக்கும் இயல்பு தானே?

ஓர் ஓடு

நேற்று காலையில் கூட பிணக்கு இருந்ததுதான். அல்ப காரணம்.

"எப்பப் பார்த்தாலும் சாம்பாரா? வத்தக் குழம்பு சாப்பிடணும்னு நாக்கு துடிக்குது."

"நான் வைச்ச வத்தக் குழம்புன்னாத்தான் தொட்டை சொல்லுவீங்களே!"

"உண்மையைத்தான் சொல்றேன். எங்கம்மா வைக்கணும். இன்னிக்கு முழுதும் சாப்

பிடலாம்."

"ஆமா! உங்கம்மாவுக்கு சமையலில் ஒழுங்காய் வருவதே அது மட்டும் தானே!"

பிறகு உன் வீடு, என் வீடு என்று வாக்குவாதம் வளர்ந்து உர்ரென்று ஆபீஸ் கிளம்பினார்.

இதற்குப் போய் யாராவது தற்கொலை செய்து கொள்வார்களா?

"என்னடி பதில் பேச மாட்டேங்கறே? என் புள்ளையை முழுங்கிட்டு உம்முனு நிக்கற மாதிரி நிக்கறே?" என்று சூடாய் வந்த மாமியாரை நோக்கினேன்.

பெற்ற வயிறு! தூக்கத்தில் எதைப் பேசுகிறோம் என்று புரியாமல் துடிக்கிறது.



பக்கத்து கிராமத்தில் இவர்கள் வசிக்கிறார்கள். டவுன் வசதி கருதி நானும், இவரும் இங்கு தனிக்குடித்தனம் வந்து விட்டோம்.

இவருக்குப் பிள்ளை என்றால், எனக்குக் கணவன். என் உள்ளம் எப்படிக் கனத்துப் போயிருக்கிறது என்பதை ஏன் புரிந்து கொள்ள மறுக்கிறார்கள்?

ஆறுதல் சொல்லவில்லை என்றாலும் குற்றம்சாட்டாமலாவது இருக்கலாமே!

செய்தி அறிந்து பார்க்க வந்த இவரின் நண்பர்களும் உறவினர்களும் கண்களில் என் மேல் குற்றத்தை சுமத்தியபடியே பேசுகிறார்களே?

நான் சாய்ந்து அழத் தோளில்லாமல் தவித்தேன். என் பெற்றோர் பம்பாயில். இங்கு வர இரண்டு நாளாகும்.

அதுவரை, இவர்களின் பார்வைகள் எப்படியெல்லாம் என்னை மூச்சுத் திணற வைக்கப் போகிறதோ, கடவுளே!

ஆம், அவர் மட்டும்தான் இப்போது என் துணை! கடவுளே, காப்பாற்று.

டாக்டர் பயமில்லை என்று சொல்லி விட்டார். முதல் மாடி என்பதால் தப்பித்தாயிற்று. அடி, நினைத்தது போல பலமில்லை. விழுந்த இடமும் புல்வெளித்தரை.

அநேகமாய் இன்னும் கொஞ்ச நேரத்தில் கண்விழித்து விடுவாராம். சீக்கிரம் கண் விழித்தால் தேவலை. காரணம் தெரிந்து விடும்.

'நீதான் காரணம்' என்று சுட்டு விரலை நீட்டி விடுவாரோ?

இருக்காது! எங்களுக்குள் ஏற்படும் சண்டைகள் நீர்க்குமிழ் ஆயுளே உடையவை. ஆதர்ச தம்பதிகள் இல்லாவிட்டாலும் அன்பான சதிபதிகள்.

வேறு என்ன பிரச்னை இருக்கும் அவருக்கு? வேறு பெண் தொடர்புகள்.... அதனால் ஏற்பட்ட மன உளைச்சல்... சேச்சே... அத்தனை துணிச்சல் கிடையாது இவருக்கு.

கொஞ்சம் பயந்த சுபாவம்தான். முன்பு தாய்க்கு, இப்போது தாரத்துக்கு ஓரளவு கட்டுப்படுபவர்.

ஆபீசில் ஏதாவது பிரச்னையோ? பணம் கையாடல், லஞ்சம் வாங்கி மாட்டிக் கொள்வது, பிரமோஷன் கிடைக்காத வருத்தம்...

மாமனார் யாரிடமோ விசாரித்துக் கொண்டிருந்தார். இவரின் ஆபீஸ் நண்பர் தான் என்பதை குரல் சொன்னது. பெயர் கூட ராமமூர்த்தியோ... ராமகிருஷ்ணனோ...

"இந்த வருஷம் இவனுக்கு ப்ரமோஷன் கிடைக்கணும் சார். ரெண்டு பேருக்குள்ள கடுமையான போட்டி. நேத்து கூட ரூமர். ராகவனுக்குக் கிடைக்காதோ அப்படீன்னு பேச்சு. ஒருவேளை..."

இருக்காது! ஒரு பதவி உயர்வு மறுப்பிற்

## கிருஷ்ணா

## அடுத்த இதழில்...

- கருணைக் கொலை : காலத்தின் கட்டாயம்? — ஓர் அலசல்
- லீவ் தராத மானேஜர்களை சமாளிப்பது எப்படி?

காக உயிரை விடுவார்களோ யாராவது? இரண்டு நாளோ, ஒரு வாரமோ வருத்தப்படலாம். அதுதான் மனித இயல்பு.

ஒருவேளை ஏமாற்றம் இவர் மனதை மிகவும் பாதித்திருக்குமோ? அத்தனை கோழையா இவர்?

கடவுளே, சீக்கிரம் கண் விழிக்கட்டும் இவர்!

இதோ அசைவு தெரிகிறது இவரிடம். கண் கூட, திறப்பதற்குப் பிரயாசைப்படுகிறது.

இதோ, கண் இமை விரிந்து... அப்பா! நெஞ்சு விம்ம, தாலியை எடுத்து கண்ணில் ஒற்றிக் கொண்டேன்.

கண்களால் என்னை, என் முகத்தை ஆராய்ந்தார். சுற்றி வரப் பார்த்தார்.

"ஆஸ்பத்திரியா?"

தலையசைத்தேன் அழுகையுடன். ஏன் இப்படிச் செய்து, இத்தனை நேரம் தவிக்க வைத்து விட்டீர்கள்?

அழ, அழ மனசின் பாரம் கண்ணின் வழியே கரைய, என் மனதில் மலர்ச்சி பரவுவதை உணர்ந்தேன்.

ஏன், ஏன், ஏன்? என்ற கேள்வி மட்டும் பல்லிடுக்கில் மாட்டிக் கொண்ட பாக்குத் தூளாய்...

அவர் பார்வை சுழன்று அந்த அறையில் இருந்த காலண்டரில் நிலைத்தது. டெய்லி ஷீட் காலண்டர்.

நானும் பார்த்தேன். அட, தேதி மூன்று! எங்கள் திருமண நாள். இந்தப் பதட்டத்தில் மறந்தே போய் விட்டது. இந்த நாளை எப்படியெல்லாம் கொண்டாடலாம் என்று போன வாரம் முதல் திட்டம் போட்டுக் காத்திருந்தோம். கடைசியில் இப்படி ஆஸ்பத்திரி அறையில்...

"சாரி டியர்" என்றார் மெதுவாய். குரல் நைந்து மெல்லியதாய் வந்தது.

"எதுக்கு?"

"அந்த ஒற்றைப் பூவை கொடுக்காததுக்கு" என்றதும் பளீரென என்னுள்ளிருந்த திரை விலகி ஆச்சரியத்துடன் அவரைப் பார்த்தேன்.

போன வாரம், இரவு சாப்பாடு முடிந்து பால்கனியில் அமர்ந்திருந்தோம்.

"நம்ம கல்யாண நாளுக்கு என்ன பரிசு வேணும் உனக்கு?"

நான் யோசித்தபடி வெளியே பார்த்தேன்.

"ம்... ஒரு பூ..." என்றேன் குறும்பாய்.

"ஒண்ணு என்ன, ஆயிரம் பூ வாங்கித் தரேன்."

"ம்ஹூம், ஒரே ஒரு பூ."

"என்ன பூ?"

"அதோ, காத்துல ஆடி, ஆடிக் கூப்பிடுதே செம்பருத்தி! அது மட்டும் போதும்" என்றேன்.

கீழே எங்கள் மாடி போர்ஷனுக்கு அடியில், சற்று தள்ளி நன்கு செழித்து வளர்ந்திருந்தது செம்பருத்தி.

உபயோகப்படாத மாத்திரையோ, இல்லை உரமோ தெரியவில்லை, நன்கு உயரமாய் வளர்ந்து விட்டது.

கீழ் வீட்டுக்காரர்கள் தங்களால் எட்டும் அளவு பூவைப் பறித்து விடுவார்கள். அவர்கள் வைத்த செடிதான் அது.

ஆனால் உச்சியில், பறிக்க முடியாத உயரத்தில், எங்கள் பால்கனிக்கு எதிரே எப்போதும் ஒரு பூ மலர்ந்து தலையசைக்கும். அடுத்த நாளே வாடி உதிரும். மீண்டும் வேறொரு கிளையில் அதே உயரத்தில் பூக்கும். பால்கனியிலிருந்து எட்டிப் பறிக்க முயன்றால் முடியாது என்னால். இடைவெளி கொஞ்சம் அதிகம்.

அதைப் பறிக்க நேற்று இரவு இவர் பால்கனி சுவர் ஏறி, அந்தப் பக்கம் இறங்கி, உடம்பை வளைத்து, கைநீட்டி, தடுமாறி, மைகாட்!

எனக்காக! நான் ஏதோ விளையாட்டாய் சொன்னதை நினைத்து இத்தனை பிரியமா?

என் மேல் இவர் வைத்திருக்கும் அன்பை நினைத்த பெருமை, என் பைத்தியக்கார ஆசையை நிறைவேற்ற முயன்று விழுந்த இவரின் பைத்தியக்கார செயலை நினைத்த கோபம், இவரைப் பற்றி இத்தனை நேரம் தவறாய் நினைத்த வெட்கம்... அதன் மேலே ஏற்படும் ஒரு பிரவாக உணர்ச்சி, இதுவரை நான் அனுபவித்திராத கலவை உணர்வு...

"சீ போ பைத்தியம்!" என்றேன் என் இதயத்தின் கனிவு முழுதையும் வெளிப்படுத்தி.

அவர் புன்னகைத்தார்.

# மணிக்கொடி

24



## ஜோதிர்லதா கிரிஜா

ராமசாமி தம்மால் இயன்ற அளவுக்குக் கட்டுப்பாட்டுடன் இருந்தார். ஆனால் வெளியே சன்னமாய்க் கேட்ட காலடியோசை விளைத்திய அச்சத்தில் அஞ்சனாவுக்கு நெஞ்சு வரண்டு போயிற்று. இருட்டுக்குச் சற்றுப் பழக்கப் பட்டிருந்ததில் இப்போது ஒருவர் முகத்தை ஒருவரால் மங்கலாய்ப் பார்க்க முடிந்தது.

காலடியோசை பலத்துக் கொண்டு வந்தது.

"அந்தப் பொண்ணு இங்கதான்டா நுழைஞ்சிருக்கணும்."

"இருக்காதுடா. க்ளாஸ் ரூம் கதவுகள்ளாம் வெளிப்பக்கம் பூட்டி இல்ல இருக்குது?"

"அந்தப் பொண்ணுக்கு முன்னால ஒரு ஆளு ஓடின்டிருந்தான்டா. அவளோட ஆளுன்னு நினைக்கிறேன். அவன் அவளைப் பிடிச்சு இழுத்துட்டு ஓடின மாதிரி தெரிஞ்சுச்சு."

"பக்கத்துல எதுனா வீட்டுக்குள்ள பூந்திருப்பாங்கடா. வாங்க போலாம். நல்ல வேட்டை நழுவிப் போயிடிச்சு...."

இருதயம் வெளியே குதித்து விடுமோ என்கிற அளவுக்கு அஞ்சனாவுக்குப் படபடப்பாக இருந்தது. அவள் தலை தாழ்ந்தது. சற்றுப் பொறுத்துத் தேய்ந்து கொண்டே போன காலடியோசை பின்னர் முற்றாக நின்று விட்டது.

"போயிட்டாங்க, மிஸ் .அஞ்சனா. கடவுளாப் பார்த்து உதவி பண்ணினமாதிரி இந்த அறைக்கு வெளித்தாழ்ப்பாள் இல்லாததுனால பூட்டாம இருந்தது. இல்லாதபோனா, அந்த ரவுடிப்பசங்க கிட்ட மாட்டிண்டிருந்திருப்போம்" என்ற ராமசாமி, தொடர்ந்து, "நம்ம மெட்றாஸ்ல இதுக்கு முந்தி இப்படி பொதுக் கூட்டத்துல கல்லெறியறது, கொல்றதெல்லாம் எனக்குத் தெரிஞ்சு நடந்ததே இல்லே. மனுஷா மனசுல, துவேஷத்தையும் விரோதத்தையும் ரொம்ப சுலபமா விதைச்



## அருள்வாக்கு

**ஸா**தாரணமாகவே ஒரு இயக்கத்துக்கு அது சொல்கிற எதிர்ப்புக் கார்யத்தை வைத்துத்தான் பொது ஜன ஆதரவு கிடைக்கிறது; இந்த அளவுக்கு அது விதிக்கிற விதிகளுக்கு ஆதரவு கிடைப்பதில்லை. 'வெள்ளைக்காரனை விரட்டு' என்று காந்தி சொன்னதால் எல்லாரும் அவர் கீழே எதிர்ப்புக் கார்யத்தில் ஒன்று சேர்ந்தார்கள். ஆனால் அவர் விதித்த அஹிம்ஸை, ஸத்யம், ஒழுக்கம், ஈச்வர பக்தி முதலானதை எத்தனை பேர் எடுத்துக் கொண்டார்களென்று பார்த்தால் வருத்தமாகத்தான் இருக்கும். வெள்ளைக்காரனிடம் ஏன் நாம் கட்டுப்பட்டிருக்க வேண்டும் என்பதாக, அந்நிய ஆட்சியின் அதர்மத்துக்காக அவ்வளவு இல்லாமல், நம்முடைய ஸ்வேச்சா ஸ்வதந்த்ரங்களில் ஆசையால்தான் பெரிய போராட்டம் நடத்தியது. அந்த காந்தியே நம்மை சில தர்மங்களில் கட்டுப்படுத்துகிறார் என்னும் போது அவற்றை ஏற்றுக் கொள்ள மனஸ் இல்லை. பொதுவாக நம்முடைய தப்பை உணர்ந்து நம்மைத் திருத்திக் கொள்வதை விட, பிறன் தப்பைச் சொல்லி எதிர்ப்பதில் தான் நமக்கு ருசி. நானே உங்களிடம் நாஸ்திகத்தையோ, கன்வர்ஷனையோ எதிர்த்துக் கூட்டம் போடுங்கள் என்று ஒரு வார்த்தை சொன்னால் உடனே பெரிசாக மஹாநாடு நடத்திக் காரஸாரமாகப் பேசி, தீர்மானங்கள் நிறைவேற்றுவீர்கள்; அதுவே, சாஸ்த்ர ஆசாரப்படி இப்படி இப்படி இருங்கள் என்று ஓயாமல் சொன்னாலும், கேட்கத் தோன்றுகிறதா?

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

சுடலாம். அன்பையும் சகிப்புத்தன்மையையும் ஏற்படுத்தறதுதான் மகா கஷ்டம். இப்ப பாருங்கோ. இந்துக்களையும் முஸ்லிம்களையும் பிரிச்சு பேதம் பண்ணி வெச்சுட்டா, அந்த விரோதத்தைத் தனக்கு ஆதாயப்படுத்திக்கலாம்னு வெள்ளைக்காரன் விஷமத்தைத் தொடங்கிட்டான். சுதேசி இயக்கத்துல மத பேதமே பார்க்காமதான் ரெண்டு சாராரும் கலந்துண்டிருந்தா. 'வந்தேமாதரம்', 'அல்லா-ஹூ அக்பர்' ரெண்டுமே கோஷமாக் கேக்கும். இப்ப பாருங்கோ. நமக்குள்ள ஒத்துமை இல்லாம சண்டை போட்டுண்டு இருக்க இருக்க அவனுக்குக் கொண்டாட்டந்தானே!"

"ஏன், சார்? 1884 ஆம் வருஷத்துலேருந்து 1888 ஆம் வருஷம் வரைக்கும் டஃப்ரின்னு ஒரு வைசிராய் இருந்தானாமே? அவன் காலத்துலயே இந்தப் பிளவை ஏற்படுத்திட்டதா எங்கப்பா சொன்னாரே, அது சரிதானா?"

"ரொம்பக் கரெக்டும்மா. அவன் என்ன சொன்னான் தெரியுமோ? 'இந்தியாவில அஞ்சு கோடி முஸ்லிம்கள் இருக்கா. அஞ்சு கோடிங்கிறது வெறும் எண்ணிக்கை இல்லே. ஒரு சக்திவாய்ந்த மக்கள் தொகை. அவாளுக்குன்னு ஒரு நாடே இருக்கக் கூடிய அளவுக்குப் பெரிய எண்ணிக்கை' அப்படின்னு வத்தி வெச்சதே அவந்தாம்மா. முஸ்லிம் லீக் ஏற்பட்டதே அவன் விதைச்ச விதையால தாம்மா. கிழக்கு வங்காளத்துல நவாப் சலீ முல்லாவை முஸ்லிம் லீகைத் தொடங்க வெச்சதே இவன் மாதிரி ஆட்களோட துண்டுதல்தான்."

**வெ**ளியே சந்தடி கொஞ்சம் கொஞ்சமாய்க் குறைந்து கொண்டிருந்தது.

"மிஸ் அஞ்சனா, நான் முதல்ல எட்டிப் பார்த்து நிலைமையைத் தெரிஞ்சுக்கறேன். அதுக்கு அப்புறம் போயிடலாம்."

அஞ்சனா, "சரி" என்றாள். ஆனால் வெளியே சந்தடி கேட்டுக் கொண்டே இருக்கக்கூடாதா என்று அவள் நினைத்தாள். இந்த இரவு விடியாமல் நீண்டு கொண்டே போகாதா என்றிருந்தது அவளுக்கு. ராமசாமியின் இனிய குரலில் புறப்படும் சொற்களைக் கேட்ட வண்ணம் ஆயுள் முழுவதும் கழித்து விடலாமே என்று நினைத்தாள்.

ராமசாமி மெதுவாக எழுந்து கதவருகே சென்று ஓசைப்படாமல் தாழ்ப்பாளைத் திறந்து இரண்டங்குல இடைவெளி ஏற்படுத்திக் கொண்டு வெளியே பார்த்தார். தெருவில் ஆள் நடமாட்டம் தென்படவில்லை.

'மிஸ் அஞ்சனா! தெருவில சந்தடி எது'



## வி.ஐ.பிக்களின் வாரிசுகள்!

● ஹரியானாவில் 96 சுங்க இலாகா இன்ஸ்பெக்டர்கள் நியமனத்துக்கு தேர்வு நடந்ததும் வாரியத் தலைவர் திடீரென ராஜினாமா செய்தார். புதிய தலைவர் பதவியேற்றவுடன் நேர்முகத் தேர்வில் தேர்ந்தெடுக்கப்பட்டதாகக் கூறி ஒரு பட்டியலை அரசுக்கு அனுப்பினார். விதிகளின்படி, பட்டியல் வெளியிடப்படவில்லை. பாதிக்கப்பட்டவர்கள் உயர் நீதி மன்றத்தை அணுகிய போது, எல்லா ஃபைல்களும் உடனே அழிக்கப்பட்டு விட்டதாகக் கூறப்பட்டதால் வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது. சுப்ரீம் கோர்ட் சி.பி.ஐ. விசாரணைக்கு உத்திரவிட்ட போது திடுக்கிடும் தகவல்கள் வெளியாயின. இலாகா காரியதரிசியின் மகள் உள்பட வி.ஐ.பிக்களின் வாரிசுகள் பட்டியலில் இடம் பெற்றிருந்தனர். உண்மையில் நேர்முகத் தேர்வே நடைபெறவில்லை. நியமனங்களை ரத்து செய்தது சுப்ரீம் கோர்ட்.

ஆதாரம் : ஹிந்து / அ. ஷண்முகசுந்தரம்.

வும் காணோம். நாம கிளம்பிடலாம்னு தோணறது..." என்று தலைதிருப்பிச் சொல்லி விட்டு அவர் கதவை மேலும் அகலமாய்த் திறந்தார். வெளிக்காற்று உள்ளே புகுந்ததும் இருவருக்குள்ளும் ஒரு புத்துணர்ச்சி பரவியது. சிறிது வெளிச்சமும் வந்தது. இன்னும் கொஞ்சம் எட்டிப் பார்த்த பின், "வாங்கோ மிஸ் அஞ்சனா, போயிடலாம்" என்றபடி அவர் முன்னால் நடந்தார். அஞ்சனா அவரைப் பின் தொடர்ந்தாள்.

தெருவின் சந்தடியற்ற நிலை அஞ்சனாவுள் ஓர் அச்சத்தைக் கிளர்த்தியது. அவரவர் ஒரு கிலியில்தான் தத்தம் வீடுகளுக்குள் பதுங்கி இருந்தனர் என்பது புரிய, இருவருக்குமே பயமாக இருந்தது.

ஒரு வழியாக வண்டி பிடித்து முதலில் ராஜாராமனின் வீட்டையடைந்தார்கள். ராஜாராமனே கதவைத் திறந்தார்.

"மீட்டிங் நன்னா நடந்ததா?"

"உள்ளே போய்ப் பேசலாம்ப்பா."

அதுகாறும் தங்களை ஆட்கொண்டிருந்த வலிமையெல்லாம் போய் விட்டாற்போல் அஞ்சனாவும் ராமசாமியும் பொத்தென்று உட்கார்ந்தார்கள்.

அப்போது மாடியறையிலிருந்து நரேந்திர நாத் பானர்ஜியும் சமையற் கட்டிலிருந்து அமராவதியும் அங்கு வந்து சேர்ந்து கொண்டார்கள்.

"தப்பிச்சு வந்தாப் போதும்னு ஆயிடுத்து" என்று தொடங்கிய அஞ்சனாவும் அவளுடன் அவ்வப்போது சேர்ந்து கொண்ட ராமசாமியும் திருவல்லிக்கேணிப் பொதுக் கூட்டத்தின் போது நடந்த கலவரம் பற்றி விவரித்தார்கள். அவர்கள் பேசத் தொடங்கிய இரண்டாவது நிமிடத்தில் பேச்சின் உணர்ச்சிவேகத்தால் தாக்கப்பட்ட பாமாவும் அங்கு வந்து நின்றுகொண்டாள்.

"தெய்வாதீனமா பக்கத்துல இருந்த பள்ளிக்கூடத்துல ஒரு க்ளாஸ் ரூம் எங்களுக்குன்னே பூட்டாதமாதிரிக் காலியா இருந்தது. அதுக்குள்ள ரெண்டு பேரும் ஓடிப் போய் ஒளிஞ்சுண்டுட்டோம்" என்ற அஞ்சனாவை, பாமா திகிலுடன் பார்த்தாள்.

"எப்படியோ ஒரு சின்னக் கீறல் கூட இல்லாம தப்பிச்சு வந்துட்டேளோல்லியோ? அது போறும்" என்றார் ராஜாராமன்.

அதன் பிறகே நரேந்திரநாத்தை ராமசாமிக்கு அவர் அறிமுகம் செய்து வைத்தார்.

"மிஸ்டர் ராமசாமி, இன்னிக்கு நீங்க நம்மாத்துலயே சாப்பிட்டுடலாம். பசியா இருப்பேள்" என்று ராஜாராமன் உபசரித்ததும், ராமசாமி உடனேயே எழுந்து கொண்டு விட்டார்.

"வேணாம் சார், இன்னொருநாள் பார்த்துக்கலாம். வீட்டுல எல்லாரும் கவலைப்பட்டுண்டிருப்பா. அப்புறம் சாவகாசமா ஒரு நாள் வறேன். நரேந்திரநாத்தோட நிறையப் பேசணும்..."

"அன்னிக்கு மாதிரி நானே உங்களைக் கார்ல கொண்டு போய் விட்டுடறேன்" என்ற ராஜாராமன், ராமசாமி மறுக்க மறுக்கக் காதிலேயே போட்டுக்கொள்ளாமல் கார்க் கதவைத் திறந்து விட்டார்.

ராமசாமி அன்றிரவு வழக்கம் போல் தமது அறையில் படித்துக் கொண்டிருந்த போது, விசாலம் குறட்டை விடத் தொடங்கியதன் பின், குஞ்சம்மா அவரது அறைக்குள் நுழைந்து கதவைச் சாத்தித் தாழிட்டாள். ராமசாமி படிப்பதை நிறுத்திவிட்டு அவளை ஏறிட்டார்.

"வா, குஞ்சம்மா. விசேஷமா ஏதானும்?" என்றார் சிரிப்புடன். ஆனால் குஞ்சம்மா அழ ஆரம்பிக்கவும், திடுக்கிட்டு, "என்ன, குஞ்சம்மா? என்ன ஆச்சு? எதுக்கு இப்ப அழறே?" என்றார்.

"இன்னும் என்ன ஆகணும்? இருட்டுல

ஒரு ரூமுக்குள்ள நீங்களும் அவளுமா இருந்துட்டு வந்திருக்கேள். ஊர் சிரிக்கிறதுக்கா? இன்னிக்கே என்காதுக்கு வந்துட்ட சங்கதி நாளைக்கு இந்த மெட்றாஸ் முழுக்கப் பரவிடாதா? பெரிய இடத்துப் பொண்ணு வேற. உங்களுக்கு ஏன்னா புத்தி இப்படிப் போறது? இதுக்கும் ஏதானும் சமாதானம் சொல்லி என்னை ஏமாத்தறதா இருக்கேளா?" என்று திக்கித் திணறி ஒரு வழியாய்ப் பேசி முடித்த குஞ்சம்மா கேவிக் கேவி அழலானாள். ராமசாமி அதிர்ந்து போனார்.

## 25

குஞ்சம்மாவின் அழுகை, துயரம் ஆகியவற்றைக் காட்டிலும், ஓர் அறையின் உள்ளே கதவைச் சாத்திக் கொண்டு தாமும் அஞ்சனாவும் கொஞ்ச நேரம் இருந்தது பற்றிய செய்தி இவ்வளவு விரைவில் தம் வீட்டுக்கு வந்து சேர்ந்து விட்டதுதான் ராமசாமியை அதிகமாக வியப்புறச் செய்தது. கூடவே தாங்க முடியாத சினம் உண்டாயிற்று. "இதபாரு, குஞ்சம்மா, நீயும் ஒரு பொண்ணு. அவ நிலைமையில உன்னை வெச்சுப் பாரு. இது மாதிரி ஒரு ஆபத்துல நீயும் சிக்கின்டேன்னு வச்சுக்கோ. அப்ப தற்செயலா அந்த இடத்துல நம்ம மணவாள நாயுடு உன்னைப் பார்க்கறார். அப்ப அவர் என்ன பண்ணுவார்? உன்னைக் கூட்டிண்டு பத்திரமான இடத்துக்கு ஓடுவாரில்லியா? அப்ப நீ வரமாட்டேன்னுடுவியா? நம்ம ஆத்துக்காரரோட ஃப்ரண்ட், ஒரு சகோதரன் மாதிரிதான் நடந்துப்பார்ங்கிற நம்பிக்கையோட நீ அவர் கூடப் போவியா, இல்லே அஞ்சாறு ரவுடிப்பசங்க கையில சிக்கி நாசமாப் போவியா?"

குஞ்சம்மாவின் பார்வை தாழ்ந்தது. அவள் யோசித்தாள். யோசனையின் விளைவாக அவள் உடம்பு நடுங்கியது. ஐந்தாறு ரவுடிகளின் பிடியில் தான் சிக்கிச் சீரழிவது பற்றிய நினைப்பையே அவளால் தாங்க முடியாது போயிற்று.

உட்கார்ந்திருந்த நிலையிலேயே நகர்ந்து வந்து அவர் கால்களைச் சேர்த்துப் பிடித்துக் கொண்டு, "என்னை மன்னிச்சுடுங்கோ. நான் சொன்னதெல்லாம் தப்பு" என்றாள்.

"சரி, சரி, எழுந்து இப்படி உக்காரு."

கட்டிலில் அவருக்கு அருகே உட்கார்ந்து கொண்ட அவள், "நிஜமாவே வெரி, வெரி சாரின்னா, என்னை ஃபோர்கிவ் பண்ணிட்டேள்தானே?" என்றாள்.



சந்தமாமா விஜயா
கம்பைன்ஸ்

சென்னை

ஆல்பட் A/c

அபிராமி A/c

கிரவுன்

நாகேஷ் A/c

AVM ராஜேஸ்வரி A/c

தினசரி 4 காட்சிகள்
மற்றும் தமிழக மெங்கும்





கமல்ஹாசன்
நடிக்கும்

# நம்மவர்

B. வெங்கட்ராம ரெட்டி
சேதுமாதவன்




**"புதுசா 'காதலன்' வெடி வந்திருக்குன்னு கொடுத்தீங்க. ஒரு வெடி கூட வெடிக்கவில்லையே!?"**
**"டேக் கிட் ஈஸி!"**

**— வில்லவன் கோதை**

---

ராமசாமி சிரிப்பையடக்கிக் கொண்டு, "ஃபார்கிவ் பண்ணியாச்சு" என்றார். அப்போது அவரது பார்வை அவளது பெரிய வயிற்றின் மீது விழ, "குஞ்சம்மா! நீ இந்த சமயத்துல அழுவே கூடாது, என்ன?" என்றார் பரிவோடு. பின்னர், "அது சரி, அதுக்குள்ள வேலை மெனக்கெட்டு பீச்ல நடந்ததைப் பத்தி உங்கிட்ட யாரு சொன்னா? ஆச்சரியமா இருக்கு எனக்கு. நம்மாத்துல டெலிபோனும் இல்லே. நான் ஆத்துக்கு வந்து சேர்றதுக்குள்ள உனக்கு நியூஸ் வந்துடுத்தே?" என்று கேட்டார்.

"நம்மாத்துல ஃபோன் இல்லாட்டா என்ன? செல்லம்மா மாமியாத்துல இருக்கே?"

"அந்த மாமிக்கு யாரு ஃபோன் பண்ணினா?"

"நீங்க ரெண்டு பேரும் நுழைஞ்ச ஸ்கூலுக்கு எதிராத்து மாடியிலேருந்து செல்லம்மா மாமியோட தங்கை பார்த்திருக்கா. ஸ்கூலுக்குப் பக்கத்துல ஒரு லாம்ப் போஸ்ட் இருக்காமே? அந்த விளக்கு வெளிச்சத்துல க்ளியராப் பார்த்திருக்கா."

"உடனே ஃபோன் பண்ணிட்டாளாக்கும்?"

"அடிதடியும் கலாட்டாவும் தொடங்கிட்ட ஒரு இடத்துலேருந்து நமக்குத் தெரிஞ்சவா தப்பிச்சு ஒரு இடத்துல பூந்துட்டா அவாளோட மனுஷாளுக்கு உடனே தெரிவிக்கணும்கிற நல்ல எண்ணத்துலயும் சொல்லி இருக்கலாமோல்லியோ?"

"நல்ல வேளை, கலாட்டா சீக்கிரமே நின்னுடுத்து. ராத்திரி முழுக்க தங்கி இருந்தா உனக்கு இன்னும் அதிகமான சந்தேகம் வரும்."

"சந்தேகம் வர்றதுக்கு ராத்திரி முழுக்க வேணுமா? அஞ்சு நிமிஷம் போறாதா?"

"சரி, சரி, போய்ப்படு."

குஞ்சம்மா அவரது மூக்கைப் பிடித்து ஆட்டிவிட்டு அகன்றாள்...

கூடத்துப் பெரிய அறையில் வழக்கம் போல் பாமா தன் மகள்களுக்கு அருகே படுத்துக் கொண்டாள். படுத்த கொஞ்ச நேரத்தில் அமராவதி தூங்கிப் போனாள். ஆனால் அஞ்சனாவுக்கும் பாமாவுக்கும் தூக்கம் வரவில்லை. அன்றிரவு கிட்டத்தட்ட அரைமணி நேரம் போல் தாழிட்ட கதவுக்கு அப்பால் ராமசாமியுடன் பேசியபடி கழித்த நிகழ்ச்சியே திரும்பத் திரும்ப அஞ்சனாவுக்கு ஞாபகம் வந்து கொண்டிருந்தது. முக்கால் இருட்டிலும் பளிங்குக் கற்கள் போல் ஒளிர்ந்த அவர் கண்களை அவளால் மறக்க முடியவில்லை.

"என்னடி, அஞ்சனா! இன்னும் தூங்கலியா?"

"இல்லேம்மா."

"அமராவதி தூங்கிட்டாளா?"

அம்மா ஏதோ பேச விரும்புவதைப் புரிந்து அஞ்சனா மெதுவாக அவளைத் தொட்டு அசைத்தாள். அவள் கண்விழிக்கவில்லை.

"தூங்கிட்டாம்மா. ஏன்?"

"உங்கிட்ட ஒண்ணு கேக்கணும்."

"என்னம்மா?"

"ஆமா? இருட்டில அந்த ராமசாமியோட கதவைச்சாத்திண்டு உக்காந்திருந்தியே, அவன் ஒண்ணும் தப்பா கிப்பா நடந்துக்கல்லியே?"

அஞ்சனாவுக்கு ஆத்திரம் சுர்ரென்று தலைக்கு ஏறியது. "அம்மா, அவரைப் பத்தி அப்படியெல்லாம் நினைக்காதேம்மா. அவர் பெர்ஃபெக்ட் ஜென்டில்மன். 'நீ எதுவும் தப்பா அவர்கிட்ட நடந்தியா?'ன்னு கேட்டு உம் பொண்மேல வேணா நீ சந்தேகப்படு."

அஞ்சனாவின் பதில் ஒரு சவுக்கடி மாதிரி பாமாவின் நெஞ்சின்மேல் விழுந்து சாடியது.

"ஆமா, நீ இப்படியே இருந்துடறதுங்கிற உத்தேசத்தோட இருக்கியாடி? ஏண்டி? இதென்ன விளையாட்டா? வாழ்க்கையோட விளையாடக்கூடாது, அஞ்சனா. ஊர்ல, உலகத்துல இல்லாத வழக்கமா இதென்ன இப்படி ஒரு பிடிவாதம் பிடிக்கிறே? என்ன காரணம்னாவது சொல்லு."

அஞ்சனா சிரித்தாள். "என்னை என் வழியில போகவிடு. இப்ப கல்யாணம்னு ஒண்ணைப் பண்ணிண்டு நீ என்னத்தைப் பெரிசா சாதிச்சே? அண்ணாவைப் பத்திக் கவலை. இப்ப என்னைப் பத்திக் கவலை. இன்னும் கொஞ்ச நாள் கழிச்சு அமராவதியைப் பத்திக் கவலைப்படுவே. கல்யாணத்தோட பலன் இது மாதிரிக் கவலைகள்தான். அதெல்லாம் இல்லாம நான் தேசத்தைப் பற்றி மட்டுமே கவலைப்பட்டுட்டுப் போறேனே?" என்றாள்.

(தொடரும்)



# தாய்மாமன்

**ப**டத்தை எப்போது ஆரம்பித்தார்கள்? முன்பாதியில் கற்காலபாணி பாட்டு, கூத்து, லவ்வு. அப்புறம்தான் டிகிரி செல்ஷியஸ் உயருகிறது.

அரசியல்தான் பின்பாதி சப்ஜெக்ட். சத்யராஜ் - மணிவண்ணன் ஜோடி. என்ன என்னவெல்லாம், யார்யாரையெல்லாம் வார முடியுமோ வாரியிருக்கிறார்கள். மயிலாப்பூர் இடைத்தேர்தல் கூத்துகள், நடைப்பயணம் எல்லாம் இதில் உண்டு.

சத்யராஜ் இதில் 100% உத்தம அரசியல்வாதி. (அமைதிப்படைக்கு பரிகாரமோ?) சுயமரியாதை இயக்கத்துச் சிந்தனைகள் வேறு. சமயம் கிடைத்தபோதெல்லாம் "காலில் விழாதே, அரசியல்வாதி மக்கள் சேவகர்" என்பது போன்ற பொன்மொழிகள். கொஞ்சம் ஓவர் டோஸ்.

மீனா ஜோடி. ஷோகேஸ் பொம்மை. ஒத்துக்கு கவுண்டமணி. தொண்டை கிழியக் கத்தல். அடிக்கடி வரும் அரசியல் நெடியில், வேறு யாருமே கண்ணில் தெரியாமல் போய் விட்டார்கள்; இசையும் பாட்டும் கூட.

'அம்மன் கோவில் வாசலிலே' பாடலில் கேமரா பளிச். கலையும் தெரிகிறது. படத்தின் வேகத்துக்கு புண்ணியம் கட்டிக் கொண்டவர்கள் எடிட்டர்கள். தொய்வு இடங்களையும் சாமர்த்தியமாய் ஓட்டி இருக்கிறார்கள்.

மக்களை எப்படியாவது தட்டி எழுப்பி விட வேண்டும் என்ற வேகம் தெரிகிறது. ஆனால், அதற்காக மக்களைச் சகட்டு மேனிக்குத் திட்டுவது, காலில் விழுபவனைக் கன்னத்தில் அறைவது எல்லாம் ஓவர்.

திருமண முறிவு விழா, கறுப்புக் கரை வேட்டி, துண்டு, சுயமரியாதைத் திருமணம் என்று திராவிட சாம்பார் தயாரித்திருக்கிறார்கள். மிளகாய் நெடி சற்றுத் தூக்கல்.

- துளசி



• உ. ராஜாஜி



• சீர்காழி வி. ரேவதி



• ஆர். வசந்தகுமார்











# துணுக்கர் வாழ்விலே துணுக்!

''உங்கள் வாழ்வில் நடந்த ஒரு மறக்க முடியாத சம்பவத்தைத் துணுக்காக எழுதுங்கள்'' என்று சில பிரபல துணுக்கு எழுத்தாளர் களிடம் கேட்டிருந்தோம்.

ஆர். வசந்தகுமார் :

கும்பகோணம் அரசினர் கல்லூரியில் நான் பி.எஸ்ஸி., படித்துக் கொண்டிருந்த சமயம். இலங்கைத் தமிழர் பிரச்னைக்காகப் போராட்டம் நடந்து, காலேஜ் ஸ்டிரைக். ஒரு வாரம் கழித்து காலேஜுக்குப் போகிறோம். ஃபிஸிக்ஸ் வாத்தியார் ரொம்ப ஸ்ட்ரிக்ட். 'ஹவரே' என்பவன் முதல் பீரியடே லேட்டாக வந்தான்.

''ஏண்டா லேட்டு?''

நாங்களெல்லாம் ஒரு பிரளயத்தை எதிர் பார்த்துக் கொண்டிருந்தோம்.

''சார், ஒரு வாரம் ஆயிடுச்சில்ல? எந்த காலேஜுன்னு மறந்துடுச்சு சார். 'தெரியாம விமன்ஸ் காலேஜு'க்குப் போயிட்டுத் திரும்பி வரேன். சாரி சார்'' என்றானே பார்க்கலாம். சிடுமூஞ்சி வாத்தியார் உட்பட வகுப்பே சிரிப்பில் வெடித்தது.

சீர்காழி வி. ரேவதி :

கல்லூரி நாட்களில் நடந்த நிகழ்ச்சி இது. ஒரு பேராசிரியர் நோட்ஸ் கொடுத்துக் கொண்டிருந்தார். ஒரு மாணவன் எழுதாமல் சும்மா உட்கார்ந்திருக்கவே, பேராசிரியர் அவனை முறைத்தார்.

''பேனாவுல இங்க் இல்லை சார்!''

''Not only is your pen empty; but your head is empty too!'' என்று சொல்லி, தன் பேனாவைக் கொடுத்தார்.

கொஞ்ச நேரத்தில் மீண்டும் அவன் எழுதாமலிருக்கவே, ''இப்ப என்ன ஆச்சு?''

''உங்க பேனாவிலும் இங்க் இல்லை சார்!''

அப்புறம் சிரிப்புக்கா பஞ்சம்?



சிறுமுகை ஜி. கதிரேசன் :

**சி**று வயதிலிருந்தே தமிழ்வாணனை எனக்கு ரொம்பப் பிடிக்கும். ஒருதரம் அவர் எங்கள் ஊருக்கு வந்திருந்த போது போய் என்னை அறிமுகப் படுத்திக் கொண்டேன்.

''ஓ, கோவில்பட்டி கறுப்புக் கண்ணாடி நேசன்னு லெட்டர் எழுதற கதிரேசன் நீங்க தானா! நல்லா எழுதறீங்க. நிறைய எழுதுங்க.''

''சார்... ஒரு ஆசை.''

''என்ன?''

''சங்கர்லாலைப் பார்க்கணும் சார். நிஜமாவே சங்கர்லால்னு ஒருத்தர் இருக்காரா?''

''ஓ எஸ். மெட்ராஸ் வாங்க. காட்ட றேன்.''

பல ஆண்டுகள் கழித்து சென்னையில் நான் அவரைச் சந்தித்த போது, அந்த முதல் சந்திப்பை மறக்காமல், ''கதிரேசன்! நல்லா பாத்துக்கங்க, நான்தான் சங்கர்லால்!'' என்றார்.

அன்று அவர் என்னைக் கட்டித் தழுவியதும், பேசி மகிழ்ந்ததும் வாழ்வில் மறக்க முடியாத சம்பவம்.

கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா:

**வை**காசி விசாகத் திருவிழாவுக்காக திருச்செந்தூருக்கு பஸ்ஸில் போய்க் கொண்டிருந்தோம். இரவு 9 மணிக்கு மேல் பஸ், திடீரென நின்று விட்டது. டிராஃபிக்ஜாம்! சாலையில் ஒரு லாரி குறுக்கே அச்சுமுறிந்து கிடந்தது. நடுராத்திரி ஆகியும் பலர் முயன்று லாரியை நகர்த்த முடியவில்லை. குழந்தைகள் அழ ஆரம்பிக்க, அதுவரை உச்சஸ்தாயியில் இருந்த பக்தகோடிகளின் ''வேல் வேல் முருகா, வெற்றிவேல் முருகா'' கோஷம் ஓய்ந்து விட்டது. ஒருவழியாக கிராம மக்கள் துணையுடன் லாரியை அப்புறப்படுத்தி விட்டு பஸ்கள் கிளம்ப, தற்செயலாக லாரியின் பின்பக்கத்தில் எழுதப்பட்டிருந்த வாசகம் கண்ணிலே பட்டது. 'வழி விடு முருகா!'

# மோட்டார் சைக்கிள் பரிசுத் திட்டம் - 9

**ந**வம்பர் பதினாலு குழந்தைகள் தினம். கீழே உள்ள கட்டங்களில் எழுத்துக்களை நிரப்பினால் குழந்தைகளுக்குப் பிடித்த நாலு விஷயங்களைப் பட்டியலிட்டதாகும். உங்களுக்கு உதவ கட்டங்களுக்கு அருகே குறிப்புகள்.

கூப்பனைப் பூர்த்தி செய்து 26 வார முடிவில் மொத்தமாக அனுப்பவும். அதிக போட்டிகளில் பங்கேற்று அதிக எண்ணிக்கையில் சரியான விடைகள் அனுப்புவோருக்கு மோட்டார் சைக்கிள் பரிசு. ஆறுதல் பரிசுகள் உண்டு. ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

## போட்டி - 9

(1) கலை

(2) இறைவனின் லீலை என்றும் சொல்வார்கள்.

(3) எல்லோருக்கும் உண்டு; ஆனால் எல்லாரும் இந்த ஸ்தானத்தை அடைவதில்லை.

(4) கோரிக்கையின் ஆரம்பம்; மிருதுவின் மையம்; ஏலத்தின் நடு மத்தி; பாலத்தின் இறுதி.

என் பெயர் : ..............................

விலாசம் : ..............................

..............................

# நீங்கள் கேட்டவை - தராசு


• அனுபவம் பேசுகிறது

● சூர்யநிலா, சேலம்.

*? முந்நாள் அமைச்சர் ராஜாராம் வீட்டின் மீது கல்லெறி சம்பவம் எதைக் காட்டுகிறது?*

! "காலையில் வாக்கிங் போகக் கூடப் பயமாயிருக்கிறது" என்று பண்ருட்டி கூறியது எதை உணர்த்துகிறதோ, அதைத்தான். தமிழ் நாட்டில் சட்டம் ஒழுங்கு குலைந்து விட்டதைத்தான்.

● பி. ராஜசேகரன், மதுரை.

*? "உட்கட்சி ஜனநாயகத்தைக் கடைப் பிடிக்காத அரசியல் கட்சிகளுக்கு அங்கீகாரம் ரத்தாகும்" என்ற சேஷன் கூற்று...?*

! நீதிமன்றம் போனால் நிற்காது. அதிகார வரம்பு மீறிய செயலாகக் கருதப்படும். ஆனால் சேஷனின் நோக்கம் பாராட்டுக்குரியது. உட்கட்சி ஜனநாயகம் இந் நாட்டில் அலட்சியப்படுத்தப்படுவது போல் உலகில் வேறு எந்த ஜனநாயகத்திலும் இல்லை.

● எம். சந்திரசேகர், திருச்சி.

*? ஆந்திராவில் "கை" ஓங்குமா?*

! எனக்கு இது "அமிலப் பரீட்சை" என்று நரசிம்மராவ்காரு ஒப்புக் கொண்டவரை சரி. ஆனால் பரீட்சையில் தோற்றால் ராஜினாமா கோரிக்கை எழுமே? அதற்குத் தயாரா? ராமராவின் "கை"தான் ஓங்கும் என்பது சமீப கணிப்பு.

● பாக்கியமுத்து, திருச்சி.

*? அடுத்த ஆண்டு தமிழகத்தில் சட்டப் பல்கலைக் கழகம் உருவாகுமா?*

! ஓயெஸ்! ஜெ. பெயர் சூட்ட எந்த ஒரு வாய்ப்பையும் தமிழக அரசு விட்டு வைக்காது.

● எஸ். நாராயணன், திருப்பாதிரிப்புலியூர்.

*? "கி.பி. 2000க்குப் பிறகு பிராமணர்களின் பருப்பு வேகாது" என்று கன்ஷிராம் கூறுகிறாரே?*

! இப்போ என்னமோ வெந்து கொண்டிருப்பது போல் அவர் பேசுவதுதான் உதைக்கிறது.

நீங்கள் கேட்டவை - தராசு

● பாளை பசும்பொன், மகராஜநகர்.

*? "ஜெ. மீதான ஊழல் பட்டியலைப் பிரதமரிடம் அளிப்பதில் பயனில்லை" என்று கலைஞர் கூறியுள்ளாரே?*

! அனுபவம் பேசுகிறது.

● என். ஜி., திருநின்றவூர்.

*? டிராஃபிக் போலீஸ்காரர்களுக்கு முகமூடி அளித்திருப்பது பற்றி...?*

! உண்மையில் அது மூக்கு மூடிதான். போக்குவரத்து மிகுந்த சாலைகளில் புகை கலந்த காற்றை சுவாசிப்பதிலிருந்து பாதுகாப்பு. ஆனால் டிராஃபிக் அத்து மீறல்களைக் கண்டுகொள்ளாதிருக்க அவர்களுக்குக் கண்மூடி தேவைப்படுவதில்லை!

● வால்டர் வெற்றிவேல், தஞ்சாவூர்.

*? பள்ளிகளில் பிள்ளைகளை கடவுள் வாழ்த்து பாடச் சொல்வது ஆத்திகக் கருத்தைத் திணிப்பது போல்தானே?*

! ஆமாமாம்; அதற்குப் பதிலாக ஆதிபராசக்தி கோலத்தில் முதல்வர் படம் மாட்டி, 'ஜெ. வாழ்த்து' பாடச் சொல்லலாம்.

● கே. ஆர். வேலுச்சாமி, வடக்கலூர்.

*? தீபாவளிக்கு இனிப்பு வகைகளைத் துறந்து விட வேண்டியதுதானே?*

! ரேஷன்ல எக்ஸ்ட்ரா சர்க்கரை கிடையாதுன்றதுக்காக ரொம்ப 'டவுன்' ஆயிடாதீங்க. அடக்கமா தீபாவளி கொண்டாடுங்களேன்.

● எஸ். ஈஸ்வரன், திருச்சி. ❑

*? டிடி. கிருஷ்ணமாச்சாரி சாலை, டிடிகே. சாலை எனவும், சி.பி. ராமசாமி அய்யர் சாலை சிபி. ராமசாமி சாலை எனவும், ராம நாயக்கர் சந்து ராம சந்து எனவும் மாற்றிய அரசு, சேமியர்ஸ் சாலைக்கு முத்துராமலிங்கத் தேவர் சாலை எனப் பெயரிட்டுள்ளதே?*

! இரண்டுக்கும் வித்தியாசம் ஒன்றுமில்லை; இரண்டுமே ஜாதி அரசியல்தான்!

● ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன்கோட்டை.

*? "வயது, அனுபவம் இவற்றுக்கு மதிப்பே இல்லாமல் யார்தான் யாரைக் குறைகூறுவது என்ற விவஸ்தையே இல்லாமல் அரசியல் தரம் தாழ்ந்து கிடக்கிறது" என்று மு.க. கூறியுள்ளாரே?*

! அதற்கு என்ன செய்ய? பொது வாழ்வுக்கு வந்து விட்டவர்கள் இதையெல்லாம் சந்திக்க வேண்டியதுதான். பதினெட்டு வயதின் வோட்டு வேண்டும்; விமர்சனம் வேண்டாம் என்றால் நடக்கிற காரியமா?

● இரா. சம்பத்குமார், இராசிபுரம்.

*? சகிப்புத்தன்மை விருது யாருக்கு வழங்கலாம்?*

! இந்தியக் குடிமகன்.

● மா. பழனிசாமி, கோவை.

*? ஆசிய விளையாட்டுப் போட்டியில் பாகிஸ்தானுக்கு ஒரு தங்கம் கூடக் கிடைக்காதது குறித்து ரொம்ப மகிழ்ச்சிதானே?*


• பிடித்த நடிகர்


• 'ஜெ' வாழ்த்து!


• பரீட்சையில் தோற்றால்...?


• கை ஓங்கும்?


• நிதான ஆட்டம்


• வாணவேடிக்கை

## நீங்கள் கேட்டவை - தராசு

! மகள் செத்தாலும் பரவாயில்லை; மருமகன் விதவையாக வேண்டும் என்கிற மனோ பாவம் எனக்கு இல்லை.

● **எம். ரத்தினவேல், பொன்மலை.**

? *திருச்சி மாநகராட்சி ஆணையர் சுவரன் சிங்கின் சீரிய நடவடிக்கைகள் தங்கள் காதுக்கு எட்டியதா?*

! ஓ யெஸ்! கூடவே பாதையோரச் சிறுகடை வியாபாரிகளின் எதிர்ப்புக் குரலும் கேட்டது. "நாங்க பொங்கி எழுந்தா தாங்க மாட்டீங்க" என்றல்லவோ ஞானராஜ் பேசியிருக்கிறார்! தீபாவளி வரை நடவடிக்கைகளை நிறுத்தி வைப்பதாக சுவரண்சிங் பெருந்தன்மை காட்டியிருப்பது ஒரு வாய்ப்பு. அதற்குள் பிரச்னையில் நிச்சயம் அரசியல் புகுந்து விடும். ஒன்று சுவரண்சிங் அடக்கி வாசித்தாக வேண்டும்; அல்லது மாற்றல் உத்தரவுக்குப் பலியாக வேண்டும். கடந்த கால நிகழ்ச்சிகள் இதைத்தான் எதிர்பார்க்கச் சொல்கின்றன.

● **எஸ். குமார், காரைக்குடி.**

? *ஜாதி பிரச்னையை வைத்துக் கொண்டு எத்தனை காலம் அரசியல் நடத்த முடியும்?*

! ஜாதி இருக்கும் வரை; அல்லது அரசியல் இருக்கும் வரை.

● **டி. ஆர்த்தி, ஈரோடு.**

? *சேஷன்....?*

! முன்னால் ஒரு 'லைன்' சேர்த்துக் கொள்ளுங்கள்.

● **அம்பி தம்பி, சென்னை.**

? *இரண்டாவது இந்தியா - வெஸ்ட் இண்டீஸ் ஒருநாள் தொடரில் இந்தியாவின் வெற்றிக்கு யார் காரணம்?*

! மழையின் உதவி, அஸாரின் நிதான ஆட்டம். இவற்றுக்கிடையில் சித்துவின் வாணவேடிக்கை ரன்ரேட்டை அதிகரிக்க, அம்பயர்கள் அளித்த வெற்றி. ஆனால் சென்னை மாட்சில் கிடைத்த வெற்றியில் அதிர்ஷ்டத்தைவிட டீமின் தகுதிக்கே பங்கு அதிகம். பிடிக்காத விஷயம் ஒன்றே ஒன்றுதான். ரசிகர்கள் காகிதம் கொளுத்தி நடத்திய தீபாராதனை. ஆபத்தான ஆர்ப்பாட்டம் அது.

● **ஆர். அப்துல்சலாம், திருச்சி.**

? *"அண்ணாவின் வாரிசு என்று நான் என்றுமே கூறிக் கொண்டதில்லை" என்று கருணாநிதி கூறியிருப்பது பற்றி...?*

! சொல்ல வேறு வேண்டுமா? அதான் படம் போட்டுக் காட்டுகிறார்களே, முப்பெரும் விழாவின் போது பெரியார், அண்ணா, மு.க. என்று.

● **சுந்தர் அழகேசன், திருச்சுழி.**

? *தயக்கமின்றி சொல்லுங்கள், தற்போது உங்களுக்குப் பிடித்த நடிகர் யார்?*

! கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டதும் ஆளுனரிடம் போய் 'உயிருக்கு ஆபத்து; பாதுகாப்புப் படை வேண்டும்' என்று விண்ணப்பித்த எஸ்.எஸ்.ஆர்.!

### ஆந்திராவில் 'கை' ஓங்குமா?

நீங்கள் கேட்டவை - தராசு

☐ ரூ 25 பரிசு பெறுபவர் :
**எஸ். ஈஸ்வரன்,
34, ஜம்புகேஸ்வரர் நகர்,
திருவானைக்கோயில்,
திருச்சி - 5.**

• கல்வீச்சு!


• வாக் போக பயம்!


• வரம்பு மீறி...


# என்ன நியாயம்?



## வட்டமேஜை

♦ பத்தோடு பதினொன்று அத்தோடு இதுவும் ஒன்று என்ற கதையாய் ராஜகோபாலன் கொலை வழக்கு விசாரணைக்கும் விடை கிடைக்கப் போவதில்லை என்பதை விளக்கும் தலையங்கம் அருமை என்றால் தமிழக 'சட்ட ஒழுங்கு' நிலையைச் சித்திரிக்கும் கார்ட்டூன் அதைவிடப் பிரமாதம்.
திண்டுக்கல்,
எப்போதும்வென்றான்.

♦ இந்து முன்னணித் தலைவர் படுகொலை மட்டுமல்ல, எத்தனையோ சம்பவங்கள். அத்தனையிலும் இந்த அரசின் அதிமெத்தனப் போக்கையும், போதாக்குறைக்கு வாய்ப் பந்தல் போடும் கையாலாகாத்தனத்தையும் வெகு அழகாகப் படம் பிடித்துக் காட்டியது தலையங்கம். பாராட்டுக்கள்.
தேவகோட்டை, த. மதிபாரதி.

♦ முதல்வர் ஜெ., கொலை பற்றி வதந்தி பரப்பக் கூடாது என்பது நியாயமே! ஆனால், ராஜீவ் கொலையுண்டதும், தி.மு.க. மீது பழி போட்டு பதவிக்கு வந்ததை மறந்தது என்ன நியாயம்? ஏழுமலை நாயக்கர் கொலையுண்டதும், தி.மு.க. பிரமுகர்கள் மீது, வை.கோ. பக்கவாத்தியத்தோடு, பழி சுமத்தியது என்ன நியாயம்? பதவிக்கு வரவும், பிறரைக் குறைகூறவும் பயன்படும் நியாயம், ஆளுங்கட்சியினர் மீது பலத்த சந்தேகம் விழுகிறது என்றதும் எப்படி அநியாயமாகி விடுகிறது?
கோயமுத்தூர்,
டி. எஸ். சுதர்சனன்.

♦ தகுந்த சமயத்தில் அரசு - தனியார் துறை ஊழியர்களின் போனஸ் அனுபவங்களை வெளியிட்டு குதூகலப்படுத்தி விட்டீர்கள். அட்டைப்பட கார்ட்டூன் பிரமாதம்.
ஊத்தங்கரை. பி. கோவிந்தசாமி.

♦ அமெரிக்காவின் தூக்கிய காலும், சதாமின் 'குச்சி ஐஸ்' நக்கலும், அந்த வசனமும் 'சூப்பர்' சிரிப்பேற்படுத்திய 'சூப்பர் கார்ட்டூன்'. 'அரஸ்'க்குப் பாராட்டுக்கள்!
சென்னை - 91,
என். கார்த்திகேயன்.

♦ ஐஸ்க்ரீம் குளத்தில்(!) நீச்சலடித்த மாதிரியான குஷி யாருக்கோ எங்களுக்கு! எங்கள் தலைவரின் சீரியஸான உண்ணாவிரதத்தைக் குறிப்பிட்டு Great என்று முடித்திருக்கும் உங்கள் பாராட்டைத்தான் சொல்கிறேன்.
மணக்காடு, சி. ரஜினி அருள்.

♦ எங்கள் ஒய்வூதியம் சம்பந்தப்பட்ட கோரிக்கையை வெளியிட்டமைக்கு நன்றி. முதலமைச்சருக்கு எங்களால் அனுப்பப்பட்ட வேண்டுகோள் அச்சுக் கார்டுகள், முதல்வர் அலுவலகத்தில் பெறவே மறுக்கப்பட்டு, அத்தனையும் திரும்ப வரப்பெற்றன என்பது தவறு. வயது முதிர்ந்த சில கிராம அதிகாரிகள், சரியான முறையில் தபால் தலை ஒட்டியனுப்பவில்லை. இத்தகைய கார்டுகள் மட்டுமே திரும்ப வந்தன. தவறுக்கு வருந்துகிறோம்.
சென்னை - 83,
டி. எஸ். ராஜகோபாலன்,
மாநிலச் செயலாளர்,
வேலை இழந்த கிராம அதிகாரிகள் சங்கம்.

♦ காக்கா ராதா கிருஷ்ணனின் பேட்டி, கண்ணில் ஈரக்கசிவை ஏற்படுத்தி விட்டது. படித்ததும் மனம் கனத்துப் போனது.
சேலம், வரத சண்முகசுந்தர வடிவேலு.

♦ "எனக்கு மட்டும் இளமையிருந்தா அதுல கொஞ்சம் சிவாஜிக்கு கொடுத்திருப்பேன்" என்ற காக்கா ராதாகிருஷ்ணனின் வார்த்தைகள் ஒவ்வொன்றும் அவரது இதயத்திலிருந்து வந்தவை என்பதில் சந்தேகமேயில்லை.
தஞ்சாவூர், வெ. முருகானந்தம்.

♦ பானுப்ரியாவின் முதல் படத்திற்கும் நூறாவது படத்திற்கும் உள்ள ஒற்றுமையை ஒப்பிட்டுக் கூறியிருக்கும் நீர்தான் உண்மையிலேயே ஞாபகசக்தி திலகம்!
அரவக்குறிச்சிப்பட்டி,
எம். அசோக்ராஜா.

♦ 'அழுக்கு' மிக அருமை. தன் குடும்பத் தொழிலை தாழ்வாக எண்ணும் இந்தக் கால இளைஞர்களின் நிலையை அருமையாகப் படம்பிடித்துக் காட்டியுள்ளார் ஆசிரியர்.
திட்டக்குடி, தி.க. வேல்முருகன்.

**அட்டையில் :**
**உமா மகேஸ்வரி**
**வண்ணப்படம் :**
**கேமரா திருஞானம்**

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 234562'.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

GISTERED NO. M. 4392
gistered as Newspaper in Srilanka